[20th September 1958

DEPUTY SPEAKER : The question is—

" That the Madras Appropriation (No. 4) Bill, 1958 (L.A. Bill No. 32 of 1958) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2, clause 3 (with the schedule), clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" That the Madras Appropriation (No. 4) Bill, 1958 (L.A. Bill No. 32 of 1958) be passed."

DEPUTY SPEAKER : The question is—

" That the Madras Appropriation (No. 4) Bill, 1958 (L.A. Bill No. 32 of 1958) be passed."

The motion was put and carried and the Bill was passed.

(3) THE MADRAS PLANTATIONS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1958 (L.A. BILL NO. 16 OF 1958)—*cont.*

*New clause 23-A.*

SRI K. RAMACHANDRAN : Sir, I move—

*After clause* 23 *add* the following as new clause 23-A. :—

' 23-A. (i) *delete* sub-sections (1) and (2) of section 41 and renumber (3) and (4) as sub-sections (1) and (2), and in the sub-section (1) as renumbered *insert* the words " when an assessee is in default in making a payment of agricultural income-tax " before the proviso '.

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

*After* clause 23 *insert* the following as new clause 23-A :—

" 23-A. *Amendment of section* 41.—Omit sub-sections (1) and (2) of section 41 and renumber sub-sections (3) and (4) as sub-sections (1) and (2)."

The amendment was duly seconded.

SRI T. T. DANIEL : Sir, I move—

*After* clause 23 *insert* the following as new clause 23-A :—

" 23-A. *Omit* the proviso to sub-section 3 of section 41 ".

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The amendments are before the House for discussion.

SRI K. RAMACHANDRAN : கனம் தலைவர் அவர்களே, புதிய கிளாஸ் 23 எ, பேரண்ட் ஆக்டின் 41-வது செக்ஷனில் 1, 2 வகுப்புகளுக்கு திருத்தமாகக் கொடுத்து இருக்கிறேன். இதன் நோக்கம் என்ன

20th September 1958] [Sri K. Ramachandran]

வென்றால், அக்ரிகல்சரல் இன்கம்டாக்ஸ் ஆபீசர், விவசாய வருமான வரி செலுத்தாதவர்களுக்கு, செலுத்த வேண்டிய தொகை அளவுக்கு அபராதம் விதிக்கலாம் என்று இருக்கிறது. ஏற்கனவே, விவசாய வருமான வரி வசூலிக்க கலெக்டருக்கு, இன்கம்டாக்ஸ் ஆபீசர் சர்ட்டிபிகேட் அனுப்பி ரெவன்யூ ரெகவரி ஆக்டின் கீழ், வசூலிக்கலாம் என்று இருக்கும்போது, இந்த அபராதம் வேறு விதிக்கவேண்டும் என்பது வரும்பத்தக்கது அல்ல. இப்பொழுது, நில வரி செலுத்தா விட்டால், பைன் ஒன்றும் கிடையாது. புதிதாக இந்தச் சட்டத்தில் இது போடப்பட்டிருக்கிறது. உண்மையிலேயே விவசாயிகள் பாதிக்கப்படுவார்கள். சாதாரண விவசாயிகள், நில வரி, வாட்டர் ஸெஸ், இன்னும் இது போன்ற எவ்வளவோ செலுத்த வேண்டியிருக்கிறது. அவைகளுக்கு மேல், இந்த வருமான வரி செலுத்த வேண்டும். விவசாயத்தில் வருமானம் நிரந்தரமில்லை. நிச்சயமாக இவ்வளவு கிடைக்கும் என்ற உத்திரவாதம் இல்லை. சகஜமாக இதில் பாக்கி ஏற்படத்தான் செய்யும். அம்மாதிரி கேசுகளை கலெக்கடருக்கு அனுப்புவதும், ரெவன்யூ ரெகவரி ஆக்ட் பிரகாரம், மூவபில்ஸ், இம்மூவபில்ஸ் இவைகளை ஜப்தி செய்வதும்தான் இருக்கவேண்டும். அதற்காகத் தனியாக ஒரு அபராதம் விதிக்கவேண்டும் என்பது நியாயம் இல்லை. அல்லது மூன்றுவது கிளாஸில் when the assessee is in default in making a payment of Agricultural Income-tax என்பதையும் சேர்த்துக் கொண்டால் போதுமானதாக இருக்கும். பீனல் ப்ரொவிஷன் வேண்டாம். ஆகவே, இதை நன்றுகச் சிந்தித்து, என் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

SRI S. LAZAR : கனம் தலைவர் அவர்களே, நான் கொடுத்திருக்கும் திருத்தத்தின் நோக்கம், வரி கொடுக்காதவர்களுக்கு, அபராதம் விதிக்கவேண்டும் என்றிருப்பதை எடுத்துவிட வேண்டும் என்பது. வரி கொடுக்கத் தவறுவதை ஒரு கிரிமினல் குற்றமாக மாற்றிவிட வேண்டாம் என்பதுதான் என் நோக்கம். பணத்தைக் கொடுக்கத் தவறினால், நிலவரி வசூலிக்க, அந்த முறையைக் கையாள்கிறோமா ? அதேமாதிரி, வருமான வரி கொடுக்கத் தவறினால், சாதாரண முறைகளில் நடவடிக்கை எடுத்துக் கொண்டு, பணத்தை வசூலிக்க ஏற்பாடு செய்வதே நியாயமாகும். அதற்குப் பதிலாக, ஏதோ பெரிய குற்றம் செய்ததாகக் கருதி, அவர்களைக் கோர்ட்டில் கொண்டு நிறுத்தப் பார்ப்பது, அபராதம் விதிப்பது, இவையெல்லாம் விவசாயிகளுக்கு மன வருத்தத்தையும், தாங்கலையும் உண்டாக்கும். ஆகவே இதை நீக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அப்படியே, அபராதம் போடவேண்டுமென்றிருந்தாலும் கூட, யு.பி. சட்டத்தில் இருப்பது போல், எட்டில் ஒரு பங்கு, அதாவது வரி எவ்வளவோ அதில் எட்டில் ஒரு பங்கு அபராதம் என்ற முறையில், அமைத்தால் நலமாக இருக்கும். ஆனால், இங்கே வரி எவ்வளவோ, அதே அபராதமாகப் போடவேண்டும் என்பது நியாயமில்லை. ஆகவே, மற்ற இடங்களில் உள்ள சட்ட அளவிலாவது, இதை மாற்றியமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இது சம்பந்தமாக, நான் ஏற்கனவே சொன்னது போல, இந்தப் பிரிவில் அப்பீல் வசதியில்லை. ஆனால், அமைச்சர் அவர்கள் அப்பீல் செய்து கொள்ள முடியும் என்று சொன்னார்கள். அம்மாதிரியெல்லாம் சந்தேகத்துக்கு இடம் இல்லாமல் யு.பி. சட்டப் பிரகாரமாவது விவரமாக அதைச் செய்யவேண்டும். ஆகவே என் திருத்தத்தை ஏற்றுக்கொண்டு, அபராதம் விதிக்கவேண்டும் என்பதை எடுத்து விடவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

* SRI T. T. DANIEL : Mr. Deputy Speaker, my amendment is to omit the proviso to sub-section (3) of section 41. As the proviso now stands, the order of the Agricultural Income-tax Officer can be considered just like a decree passed by a Civil Court and the Collector can execute that order in the same manner as a Civil Court can execute a decree passed by it for the recovery of the decree amount. 10-30

So, under the provisions of the main Act, the assessee can be even arrested by the Collector for arrears by an arrest warrant and the Collector can send the defaulter-assessee to civil jail. I think that this is more or less a primitive notion about recovery of any dues by the Government from its subjects. We are now seriously thinking whether the time has not arrived when we should revise even our Civil Procedure Code in regard to the provision for arresting a judgment-debtor if he has no money to pay and even drop that provision. At this stage when society is progressing, it is really painful to have a provision which says that an assessee who has failed to pay the agricultural income-tax can be arrested under an arrest warrant and can be sent to civil jail. I therefore request that the Hon. Minister may seriously consider this aspect of the question and *add* at the end of the proviso to sub-section (3) of section 41 which states—" Provided that, without prejudice to any other powers of the Collector in this behalf, he shall for the purpose of recovering the said amount have the powers which under the Code of Civil Procedure, 1908 (Central Act V of 1908), a Civil Court has for the purpose of the recovery of an amount due under a decree " the following words, viz., " except the right to arrest the assessee and send him to civil jail."

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, this provision is nothing new. It is already found in the parent Act. A provision like this, for penalty is good. That is what I thought. Anyway, I have no objection to accept the amendment moved by hon. Member Sri Lazar in view of the fact that this is a new Act. Mr. Lazar's amendment is clearer and I accept it. As for the amendment suggested by hon. Member Sri Daniel, I cannot accept it as the provision relating to the collection of arrears is necessary.

The amendment of Sri K. Ramachandran was, by leave, withdrawn.

DEPUTY SPEAKER : I shall now put the amendment moved by hon. Member Sri S. Lazar to the vote of the House. The question is—

" *After* clause 23 *insert* the following as new clause 23-A—

' 23-A. *Amendment of section* 41.—*Omit* sub-sections (1) and (2) of section 41 and *renumber* sub-sections (3) and (4) as sub-sections (1) and (2) '."

The amendment was put and carried.

The amendment Sri T. T. Daniel was, by leave, withdrawn.

Clause 24 was put and carried.

*New clause 24-A.*

SRI S. LAZAR : Sir, I move—

" *After* clause 24 *insert* the following as new clause 24-A—

' 24-A. *Amendment of section* 43.—The words " or section (41) " in section 43 shall be *omitted* and the word " or " shall be inserted before the words ' section 25 '."

SRI T. T. DANIEL : I second the amendment, Sir.

SRI K. RAMACHANDRAN : I move—

" *After* clause 24, *add* the following as new clause 24-A—

'24-A. In section 43 of the principal Act, *omit* the words " or section 41 " '."

SRI M. JAGANNATHAN : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : I shall now put the amendment moved by Mr. Lazar to the vote of the House. I think it is only a consequential amendment. The question is—

" *After* clause 24 *insert* the following as new clause 24-A.

'24-A. *Amendment of section* 43.—The words " or section (41) " in section 43 shall be omitted and the word ' or ' shall be inserted before the words " section 25 " '."

The amendment was put and carried.

The amendment of Sri K. Ramachandran was, by leave, withdrawn.

*New clause 24-B.*

SRI S. LAZAR : Sir, I move—

" *After* new clause 24-A *insert* the following as 24-B—

'24-B. In section 49 of the principal Act *for* the words " he shall be deemed to have committed the offence described in section 177 of the Indian Penal Code (Central Act XLV of 1860)" *substitute* the words " he shall be punished with fine which may extend to one thousand rupees ".' "

SRI T. T. DANIEL : I second the amendment, Sir.

THE HON. SRI M. A. MANICKAVELU : I oppose the amendment, Sir. After all, the offences mentioned here are offences described in section 177 of the Indian Penal Code. So, for the same offences, we must have the same punishments as provided in the Penal Code.

The amendment was, by leave, withdrawn.

Clauses 25 to 28 were put and carried.

(Mr. Speaker in the Chair.)

*Clause 29.*

MR. SPEAKER : The motion is—

" That clause 29 do stand part of the Bill."

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

" *After* item (ii) of clause 29, *add* the following :—

' (iii) to the same sub-section, the following proviso shall be added, namely :—

" Provided that the provisions of sections 35 and 36 shall, so far as may be, apply in relation to the composition of agricultural income-tax under this section, as they apply in relation to the assessment of agricultural income-tax under this Act." ' "

This is a provision under which compounding is allowed. If there is any attempt to escape, there must be provision for taking action and only for this purpose this amendment has been moved.

MR. SPEAKER : I shall now put the Government amendment to the vote of the House. The question is—

" *After* item (ii) of clause 29, *add* the following :—

' (iii) to the same sub-section, the following proviso shall be added, namely :—

" Provided that the provisions of sections 35 and 36 shall, so far as may be, apply in relation to the composition of agricultural income-tax under this section, as they apply in relation to the assessment of agricultural income-tax under this Act." ' "

The amendment was put and carried.

Clause 29, as amended, was put and carried.

*New clause 29-A.*

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, I move—

" *After* clause 29, *add* the following as new clause 29-A :—

29-A. After the commencement of this Act all categories of land tax in force before its commencement shall be substituted by a basic figure of Re. 1 per acre for all lands irrespective of the categories to which they belong.' "

SRI K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

10-40 a.m.] SRI T. S. RAMASWAMY PILLAI : கனம் சபாநாயகர் அவர்களே நான் என்னுடைய திருத்தத்தை பிரேரேபிக்கிறேன். இப்பொழுது விவசாய வருமான வரி வரும்போது நில வரியை உடனடியாக மாற்றிஅமைத்ம் அடிப்படை வரியாக விதிக்கவேண்டும் என்பது என்னுடைய திருத்தது. இந்தத் திருத்தத்தின் கொள்கையை ஏற்கெனவே கனம் மந்திரி அவர்கள் ஒத்துக்கொண்டிருக்கிறார். ஒன்று அல்லது இரண்டு வருஷங்கள் இதை வைத்துப் பரிசீலனை செய்து பார்த்து விட்டு அதன் மூலம் எவ்வளவு வருமானம் வருகிறது என்பதைப் பார்த்து விட்டு அதன் பிறகு இதைப்பற்றி நிச்சயம் செய்து கொள்ளலாம், என்று குறிப்பிட்டிருக்கிறார். இப்பொழுது ஆட்சி நடத்தும் கட்சி, இந்த அரசாங்கம் ஏற்கெனவே சோஷலிஸ்ட்டிக் பாட்டர்ன் அப் சொசைட்டி அமைக்கப்போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். அந்த அடிப்படையில் அரசாங்கத்தை நடத்தவேண்டும் என்று ஏற்கெனவே திட்டம் வகுத்திருக்கிறார்கள். அந்த அடிப்படையில் கொள்கையை அமைத்

திருக்கிற அரசாங்கம் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதற்கு எந்த விதமான கஷ்டமும் இருக்காது. இப்பொழுதுள்ளபடி பெரிய நிலச்சுவாந்தார்களுக்கு வரி விதித்து சிறிய நிலச்சுவாந்தார்களுக்கும் மத்திய தர நிலச்சுவாந்தார்களுக்கும் இந்த வரியை விட்டு விலக்கு அளித்திருப்பதை நான் வரவேற்கிறேன். இப்படிப்பட்ட ஒரு முறையைக்கொண்டு வந்திருப்பதனால் பல லட்சக்கணக்கான விவசாயிகளுக்கு பெரிய சௌகரியம் ஏற்படுகிறது என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இன்னுமொரு விஷயத்தையும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இன்றையதினம் காலை கேள்வி நேரத்தில் கன்யாகுமரி ஜில்லாவில் திருப்பு வாரம் என்ற வரிக் கொள்கை இருந்து வருகிறது என்று தெரிவிக்கப்பட்டது. அந்த முறைப்படி ஒரு எக்கருக்கு ஒரு வருஷத்திற்கு இவ்வளவு வரி என்று விதிக்கப்பட்டது. அதாவது எக்கர் ஒன்றுக்கு 20 முதல் 25 ரூபாய் வரையில் விதிக்கப்பட்டது. அந்த முறையில் நில வரியைக் குறைத்தார்கள். அவ்வாறு குறைக்கும்போது நிலவரி வசூலிப்பதில் ஒரு பாகத்தை அரசாங்கத்திலிருந்து பத்மநாபசாமி கோவிலுக்குத் திருப்பித்தரப்படும். அதனால்தான் அதற்கு திருப்பு வாரம் என்ற பெயர் வந்தது. ஆகவே விவசாயிகள் அடிப்படை வரியைக் கொடுக்கவேண்டும். அப்படி வைத்துக் கொண்டால்தான் அது நியாயத்திற்கு உகந்ததாகும். இதைப்பற்றி பரிசீலிக்க திருவனந்தபுரத்தில் பெரிய அதிகாரிகளைக் கொண்ட ஒரு கமிட்டி அமைக்கப்பட்டு இதைப்பற்றி பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். அந்தக் கமிட்டி இப்படிப்பட்ட வாரம் நியாயம் இல்லை என்று தீர்ப்புக் கூறினார்கள். ஆகவே நம்முடைய நாட்டில் நில வரிக் கொள்கையை மாற்றி அமைத்து நாமினால் அளவில் ஒரு எக்கருக்கு இவ்வளவு போடுவது என்று இருந்தால் விவசாயப் பெருங்குடி மக்களுக்கும் மத்திய தர விவசாயிகளுக்கும் பெரிய வசதியாக இருக்கும் என்பதைக் குறிப்பிட்டுக் கொண்டு நான் முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI T. T. DANIEL : Sir, I like to point out that at the time of extending this Act to Kanyakumari as my friend has suggested, the question of "Maniamkaram" has to be deeply and completely analysed. Otherwise it will cause a great deal of confusion to the agriculturists there. I think that the question of recovery of this "Maniamkaram" even at present has created great confusion in the Kanyakumari district. I would be very much thankful to the Hon. Minister if he will place on the table of this House during the course of this session a statement showing what the position of the recovery of "Maniamkaram" is, whether the Kerala officers are entitled to recover this from the ryots in Kanyakumari district and whether any negotiation is going on between the officers of the Kerala Government and this Government regarding the settlement of this question. The Government should also bear in mind what is called "Damodaran Asan Committee Report" approved unanimously by all the parties of the former Travancore-Cochin State and the contentions and decisions arrived at in the Damodaran Asan Committee Report, while settling the Maniamkaram question. 10–45 a.m.

MR. SPEAKER : Before we proceed further, I would like the hon. Member Sri Ramaswamy Pillai to let me know why I should not rule this amendment out of order.

SRI T. S. RAMASWAMY PILLAI : I anticipated this, Sir.

MR. SPEAKER : Oh! The hon. Member anticipated it. Now I rule the amendment out of order.

*Clause* 30.

MR. SPEAKER : The motion is—

"That clause 30 do stand part of the Bill."

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

"In clause 30 of the Bill, for the proviso to Part I of the Schedule, *substitute* the following proviso, namely :—

'Provided that in the case of every company, agricultural income-tax shall be charged at the maximum rate on the whole of the total agricultural income.'"

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In Part I of the Schedule in item I, *for* the figure '3,600', *substitute* the figure '2,500'."

The amendment was duly seconded.

SRI K. RAMACHANDRAN : Sir, I move—

"In Part I of the Schedule in item 1 *for* the figure '3,600', *substitute* the figure '6,000' and in item (2) *for* the figure '1,400', *substitute* the figure '2,500' and in item (3) *for* the figure '5,000', *substitute* the figure '2,500."

The amendment was duly seconded.

SRI K. RAMACHANDRAN : Sir, I move—

"In Part II of the Schedule in item I *for* the figure '12½', *substitute* the figure '18', in item (2) *for* the figure '7½', *substitute* the figure '9' and in items (3) to (5) *substitute* the figure '15' *for* figure '10'."

The amendment was duly seconded.

* SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, 3,600 ரூபாயிலிருந்து 5,000 ரூபாய் வரையில் உயர்த்த முடியாது என்று கனம் மந்திரி அவர்கள் சொன்ன காரணம் 1,400 ரூபாயாக முதலில் போடுவதாக இருந்தோம், இப்பொழுது 3,600 ரூபாய்க்குப் போட்டிருக்கிறோம் என்று சொன்ன காரணம் அவ்வளவு சரியாக இல்லை என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். 3,600 ரூபாய் வருமானம் வருகிறது என்றால் அந்த அளவில் 300 ரூபாய் சர்க்காருக்கு வரி கொடுக்கிறார்கள். அதே சமயத்தில் 3,600 ரூபாய் விவசாய வருமானம் வரக்கூடிய காலத்தில் எந்த அளவுக்கு சர்க்காருக்கு வரி கட்டுகிறார்கள் என்று பார்த்தால் அவர்களுடைய கணக்குப் பிரகாரம் தெரியும் 3,600 ரூபாய் வருமானம் வருவதாக இருந்தாலும் அவர்களுக்கு சர்க்காருக்கு 200 ரூபாய் நில வரியாகக் கட்ட வேண்டியதாக இருக்கிறது. அத்துடன் வருமான வரி வேறுகட்ட வேண்டியதாக இருக்கிறது. அத்துடன் அவர்கள் 50 ரூபாய் வரி செலுத்துவதாக இருந்தாலும் இன்னும் சர் சார்ஜ் கட்டுகிறார்கள். அந்த சர் சார்ஜ் இரண்டணாவாக இருந்தது அப்படியே தான் இருக்கிறது, இன்னும் போகவில்லை. அது போக செஸ் ரூபாய்க்கு ஒரு அணா இருந்தது. இப்பொழுது ஐந்தணாவாக உயர்ந்திருக்கிறது. இன்னும் விலைவாசி வருஷா வருஷம் இறங்கு முகமாகவே இல்லை, ஏறு முகமாகத்தான் இருக்கிறது. அதில் நிரந்தரமான நிலைமை கிடையாது. பண்ணைக்கும் அதிகப்படியாகச் செலவு

20th September 1958] [Sri N. K. Palanisami

செய்து பயிரிட வேண்டியதாக இருக்கிறது. அதற்கு வேண்டிய மழை பெய்வது இல்லை. திடீரென்று மழைபெய்யாமல் போய்விட்டால் எதிர் பார்த்த அளவு வெள்ளாமை இருக்காது. விலைவரசிகள் குறைந்து போனால் அவர்கள் எதிர் பார்த்த அளவில் வருமானம் வராது. இப்படி பல விதங்களில் விவசாயிகளுக்கு நஷ்டம் ஏற்படுகின்றன. அதனால் தான் குறைந்த பட்சம் 5,000 ரூபாயாக உயர்த்தவேண்டும் என்று சொல்லு கிறோம். ஒரு ஏக்கருக்கு 300 ரூபாய் வருகிறது என்று கணக்குப் போடு கிறார்கள். அது எப்படி இருக்கிறது என்றால் தெனாலி ராமன் ஆற்றில் இறங்குவதற்குக் கணக்குப் போட்டது போல்தான் இருக்கிறது. தெனாலி ராமன் ஆற்றைக் கடக்க முதலில் ஒரு அடி ஆழம் இருக்கிறது, பிறகு மூன்று அடி ஆழம் இருக்கிறது, நடுவில் ஐந்தடி ஆழம் இருக்கிறது என்று சராசரி கணக்குப் போட்டு ஆற்றில் இறங்கி விடலாம் என்று நினைத்து ஆற்றில் இறங் கியதுபோல் இருக்கிறது சர்க்கார் நில வருமானத்திற்குக் கணக்குப் போடு வதானது. ஒரு ஏக்கருக்கு நிகர லாபம் 300 ரூபாய் என்று போட்டி ருக்கிறார்கள். இப்படி நிகர லாபம் எப்படி கிடைக்கும் என்பதுதான் தெரியவில்லை. இதை கனம் மந்திரி அவர்கள் எப்படி ஒத்துக்கொண்டார் என்பதுதான் தெரியவில்லை. ஆகவேதான் 3,600 ரூபாய் என்று இருப்பதை 5,000 ரூபாய் என்று உயர்த்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

Sri K. RAMACHANDRAN : கனம் சபாநாயகர் அவர்களே, இப் பொழுது 3,600 ரூபாய் என்று இருப்பதை 6,000 ரூபாய் என்று அமைத் துக்கொள்ளவேண்டும் என்பதுதான் என்னுடைய திருத்தம். சாதாரண மாக மத்தியதர விவசாயிகளும், சாதாரண விவசாயிகளும் இதனால் பாதிக் கப்படக்கூடாது என்ற காரணத்திற்காகத்தான் இந்தத் திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது $12\frac{1}{2}$ ஏக்கர் ஸ்டாண்டர்ட் ஏக்கர் என்று வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதிலிருந்து கொஞ்சம்கூட அதிகப்படுத்தப்படாத காரணத்தால் வருமான அடிப்படையிலாவது ஓரளவு விவசாயிகளுக்கு பாதுகாப்பு அளிக்கவேண்டும், அந்த முறையில் செய்ய வேண்டும் என்பதற்காக இந்தத் திருத்தத்தை ஒப்புக்கொள்ளவேண்டும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இத்துடன் வருமான வரி சம்பந்தமாக மற்றவர்கள் கட்டக்கூடிய வருமான வரி 3,600 ரூபாய்க்கு மேல் வருமானம் வரக்கூடியவர்கள் தான் கட்டுகிறார்கள். விவசாயிகள் ஏற்கெனவே நில வரி வேறு கட்டு கிறார்கள். அதனால் விவசாயிகளுக்கு இப்படிப்பட்ட வரியைப் போடுவதால் அவர்களுக்கு அதிகப்படியாக அபராதம் போடுவதாக இருக்கிறது. இந்த முறையில் இருப்பதால் இது கூடாது என்பதற்காகத்தான் இப்பொழுது 3,600 ரூபாய் என்று இருப்பதை 6,000 ரூபாய் என்று அமைத்துக்கொள்ள வேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். 3,600-க்கு மேல் சற்று அதிகமாக இருக்கவேண்டும் என்ற அடிப்படையில் இந்தத் திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சாதாரணமாக 5,000 ரூபாய் வருமானம் வரக் கூடியதாக இருந்தால் 3,600 போக 1,400 ரூபாய் ஆகிறது, அதற்கு கிட்டத்தட்ட 75 ரூபாய் வருமான வரி கட்ட வேண்டியதாக இருக்கும். ஆகவே 200 முதற்கொண்டு 250 ரூபாய் வரையில் வரி செலுத்த வேண்டி யதாக இருக்கும். அதனால் அவர்களுக்குக் கஷ்டங்களை அளிக்காமல் இருப் பதற்காக இப்பொழுது அமைக்கப்பட்டிருக்கும் லிமிட்டை சற்று உயர்த்தி 6,000 ரூபாய் வரை வைக்கவேண்டும் என்று திருத்தம் கொடுக்கப்பட்டிருக் கிறது. அதன் மூலமாக சாதாரண விவசாயிகளுக்கும் மத்தியதர விவசாயி களுக்கும் நல்ல நிலைமை ஏற்படும் என்ற காரணத்திற்காக இப்படிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. நிலத்தில் ஒரு வருஷத்தில் கிடைத்த வரு மானம் அடுத்த வருஷம் கிடைக்கும் என்ற நிச்சயம் இல்லை. அந்த முறையில் அவர்களுக்கு விதி விலக்கு இருக்கவேண்டும் என்ற அடிப்படை யில் இந்தத் திருத்தம் கொடுக்கப்பட்டிருப்பதால் இதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

*Sri K. ANBAZHAGAN : மதிப்பிற்குரிய தலைவர் அவர் 10-50 களே, இப்போது பிரேரேபிக்கப்பட்ட திருத்தத்தை கனம் அமைச்சர் a.m

ஒரு வேளை ஒப்புக்கொண்டு விட்டால் என்ன செய்வது என்ற ஐயப்பாட்டி னால்தான் நான் இப்போது பேச முற்படுகிறேன். வருடத்திற்கு 3,600 ரூபாய்க்கு மேல் விவசாய வருமானம் பெறுபவர்களுக்கே விவசாய வரு மான வரி விதிக்கப்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் இம்மசோதாவில், ஆண்டிற்கு 3,600 ரூபாய் வரையில் விவசாய நிகர வருமானம் பெறுபவர் களுக்கு இவ்வரியினின்றும் விலக்களிக்கப்பட்டிருக்கிறது. இந்த விதி விலக்கு அளவை 3,600 ரூபாயிலிருந்து 5,000 ரூபாயாக உயர்த்த வேண்டுமென்று பொது உடைமைக் கட்சியைச் சேர்ந்த கனம் நண்பர் திரு பழனிசாமி மிக மிக வலியுறுத்திக் கூறியிருக்கிறார். நிகர விவசாய வருமானத்தின் மீதே இவ்வரியை விதிக்க வேண்டுமென்று மசோதா கூறுவதால், இந்த விதிவிலக்கு அளவினை உயர்த்த வேண்டியதில்லை என்று நான் நினைக் கிறேன். ஒருவருக்குக் கிடைக்கும் மொத்த விவசாய வருமானத்தில், அவர் செலுத்த வேண்டிய சாதாரண வரிகளும் அவர் விவசாயத்திற்காகச் செலவழித்திருக்கும் பணமும் நீங்கலாக உள்ள தொகைதான் அவ ருடைய நிகர விவசாய வருமானம் ஆகும். இப்படிப்பட்ட நிகர விவசாய வருமானத்தின் மீதே இவ்வரியை விதிக்க வேண்டுமென்று மசோதா கூறுவதால், இந்த விதிவிலக்குத் தொகையை உயர்த்த வேண்டியதில்லை என்று திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் நான் தெருவிக்கின்றேன். மேலும், இந்த விதிவிலக்குத் தொகையை உயர்த்தினால், இன்றைய சமு தாயச் சூழ்நிலையில் அதிக வருமானம் உள்ளவர்களிடமிருந்து எவ்வளவு வரி பெற வேண்டுமென்று நாம் கருதுகிறோமோ அவ்வளவு வரித் தொகையை பெற முடியாதபடி போய்விடும்; நமது லட்சிய அளவை விடக் குறைவான அளவில்தான் நமக்கு வரி கிடைக்கும். ஏனென்றால், இம்மாநிலத் தில் அதிக விவசாய வருமானமுள்ளவர்கள் எண்ணிக்கை மிக மிகக் குறைவு. நாம் இயற்றும் சட்டம் இப்படிப்பட்ட குறைந்த எண்ணிக்கையில் உள்ள அதிக வருமானக்காரர்களிடமிருந்து அதிக வரியை வசூலிப்பதற்கு வகை செய் வதாயிருந்தால்தான், அது பயனுள்ள சட்டமாக இருக்கும். விதி விலக்குத் தொகையை 5,000 ரூபாயாக உயர்த்த வேண்டுமென்று கோரும் திருத்தம் எதிர்க் கட்சியிலிருந்து பிரேரேபிக்கப்பட்டிருக்கிறது என்ற காரணம் காட்டி அதை ஏற்றுக்கொண்டுவிடக் கூடாது என்று திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் கனம் அமைச்சரவர்களை வலியுறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். விதிவிலக்குத் தொகையாகிய 3,600 ரூபாயை உயர்த்தவேண்டாம் என்று சொல்லிக்கொள்கிறேன்.

* **Sri V. K. RAMASWAMY MUDALIYAR**: கனம் சபாநாயகர் அவர்களே, இந்தத் திருத்தத்தை ஆதரித்து நான் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இப்போது ஆந்திரா ராஜ்யத்திலே 5,400 ரூபாய்க்கு உச்ச வரம்பு கட்டியிருக்கிறார்கள். உச்ச வரம்பு கட்டி வருமானத்தை நிகரமாக்கியிருக்கிறார்கள். நிலவுடமைக்கு உச்ச வரம்பு கட்டுவதற்கு முதற்படியாக இதைச் செய்திருக்கிறார்கள். ஆனால், அங்கே இன்னும் விவசாய வருமானத்தின் பேரில் வருமான வரி போடவில்லை. இந்த விதிவிலக்குத் தொகை 5,400 ரூபாய்க்குக் குறைந்தால் எத்தனையோ மத்தியதர விவசாயிகள் கஷ்டப்படுவார்கள் என்று கருதித்தான் அவர் கள் அந்த வரம்பை நிர்ணயித்திருக்கிறார்கள். ஆகையால், இதை 5,400 ரூபாயாக நிர்ணயித்தாலும் மத்தியதர விவசாயிகள்தான் பாதிக் கப்படுவார்கள் என்பதையாரும் மறுக்க முடியாது. இப்போது இயற்றப் படும் சட்டம் அமலுக்கு வந்தபிறகு அனேக குழப்பங்கள் வரப்போகின்றன. அது அமுலுக்கு வந்த பிறகு ராஜ்யத்தில் லஞ்ச ஊழலும் அதிகரிக்கும். இந்த விதிவிலக்குத் தொகையை 5,000 ரூபாயாக உயர்த்தினால்தான் மத்தியதர விவசாயிகள் பெரிதும் பாதிக்கப்பட மாட்டார்கள் என்பது என் தாழ்மையான அபிப்பிராயம். இந்த மசோதாவில் "பீனல் க்ளாஸெஸ்" கூட கடுமையாக இருக்கின்றன. இப்போது விலைவாசிகள் மிகவும் ஏறிவிட்டன. இவைகளையெல்லாம் பார்க்கும்போது, இந்த விதி விலக்குத் தொகையை 5,000 ரூபாயாகவாவது உயர்த்த வேண்டியது மிகவும் அவசியம் என்று தோன்றுகிறது. எனவே, இந்தத் திருத்தத்தைக் கட்டாயம் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன்.

20th September 1958]

* **The Hon. Sri M. A. MANICKAVELU** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா முதலில் சபையில் பிரேரேபிக்கப்பட்டபோது இதில் இருந்த நிபந்தனைகளுக்கும் இப்போது இதில் இருக்கும் நிபந்தனை களுக்கும் அதிக வேறுபாடுகள் இருக்கின்றன. இந்த விதி விலக்கு வரம்பு 1,500 என்றுதான் முதலில் மசோதாவில் குறிப்பிடப்பட்டிருந்தது. அதை, பொறுக்குக் கமிட்டியில் தீர ஆராய்ந்த பிறகு, 3,600 ரூபாயாக மாற்றுவது நியாயம் என்று ஒத்துக்கொண்டோம். இந்த 3,600 ரூபாய் நிகர வருமானம் (நெட் இன்கம்) ஆகும். இப்போது வருமான வரியை எடுத்துக்கொண்டால், 3,600 ரூபாய்க்கு மேல் வருட வருமானம் பெறு பவர்கள் வருமான வரி கட்டவேண்டும். விவசாய வருமானத்திற்கும் அந்த அடிப்படையிலேயே வரி போடுவது நியாயம் என்று நான் நினைக்கி றேன். விதிவிலக்கு வரம்பை 5,000 ரூபாயாக மாற்றுவது சரியில்லை என்று சொல்லிக்கொள்கிறேன்.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I want to have a clarification from the Hon. Minister. Is it the net income of the gross income?

* **The Hon. Sri M. A. MANICKAVELU** : கனம் சபாநாயகர் அவர்களே, அது நிகர வருமானம் (Net income) தான். பொறுக்குக் கமிட்டியில், தீர ஆராய்ந்த பிறகு அது நிகர வருமானமாகத்தான் இருக்க வேண்டுமென்று ஒத்துக்கொண்டோம். ஒரு ஏக்கருக்கு 300 ரூபாய் எதிர்பார்ப்பது ரொம்ப அதிகம் என்று சொல்லப்பட்டது. ஆனால், நாங்கள் விசாரித்ததில், ஒரு ஏக்கருக்கு 700 ரூபாய் அல்லது 800 ரூபாய் அல்லது 1,000 ரூபாய்கூட வருமானம் வரும் என்று தெரிந்துகொண் டோம். சில இடங்களில் ஏக்கருக்கு 300 ரூபாய்க்கும் குறைவாக வருமா னம் வருகிறது என்பதை ஒத்துக்கொள்கிறேன். ஆனால், சராசரியாக, ஒரு ஏக்கருக்கு 300 ரூபாய் வருமானம் வரும் என்ற முடிவிற்கு வந்தோம். அதை ஒத்துக்கொண்டோம். இதை மிகத் துல்லியமாக— தராசில் வைத்து நிறுப்பது போல்—நிர்ணயிக்க முடியாது. இப்போது நிர்ணயித்திருப்பது சரியானது. விதி விலக்கு வரம்பாகிய 3,600 ரூபாய் சரியான வரம்பு என்று திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த ஸ்ரீ அன்பழகனும் சொன்னார்.

கடைசியாக, ஒன்று சொல்ல விரும்புகிறேன். விவாதம் நடக்க நடக்க, கனம் அங்கத்தினர்கள் சர்க்காரின் கஷ்டத்தையும் தங்களுடைய பொறுப் பையும் உணருகிறார்கள். வரி போட்டால்தான் சர்க்கார் நடக்க முடியும் என்பதை கனம் அங்கத்தினர்கள் உணருகிறார்கள். பணம் இருந்தால் தான் அரசாங்கம் நடக்க முடியும். இந்த மசோதாவில் நிர்ணயிக்கப் பட்டுள்ள வரி விகிதங்கள் சரியானவை என்று சொல்லிக்கொள்கிறேன்.

Mr. SPEAKER : The question is—

In clause 30 of the Bill, *for* the proviso to Part I of the Schedule, *substitute* the following proviso, namely :—

'Provided that in the case of every company, agricultural income-tax shall be charged at the maximum rate on the whole of the total agricultural income'.

The amendment was put and carried.

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

The amendment of Sri K. Ramachandran relating to Part I of the Schedule was put and lost.

The amendment of Sri K. Ramachandran relating to Part II of the Schedule was, by leave, withdrawn.

Clause 30, as amended, was put and carried.

Clauses 31 to 33 were put and carried.

### *Clause* 34.

MR. SPEAKER : The motion is—

"That clause 34 do stand part of the Bill."

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"*After* sub-clause (2) of clause 34, *add* the following new sub-clause :—

'(3) The provisions of sections 35 and 36 of the Principal Act shall, so far as may be, apply in relation to the composition of agricultural income-tax under this section, as they apply in relation to the assessment of agricultural income-tax under the Principal Act'."

For the same reasons I mentioned previously, I have moved this amendment. I request the House to accept it.

Sir, I also move—

To sub-clause (1) of clause 34, *add* the following proviso, namely :—

'Provided that in the case of every company, the lump sum so payable shall be charged at the maximum rate on the whole of the total extent of the land held by that person'.

This amendment is similar to the one moved already.

The amendments were put and carried.

Clause 34, as amended, was put and carried.

### *Clause* 1.

MR. SPEAKER : The motion is—

That clause 1 do stand part of the Bill.

SRI S. LAZAR : I want a small clarification, Sir. I would like to bring to the notice of the House that the Hon. Minister was saying the other day that the Government did not intend to apply this Amendment Act to the Kanyakumari district. The Act as it is to-day says that it shall extend to the whole State of Madras. In the absence of a clause which says when the Amendment Act will actually come into force under the General Clauses Act, it is deemed to have come into effect immediately after assent to it is given. Immediately after assent is given to this Amendment Act, it will have to be applied to the entire State including the

20th September 1958] [Sri S. Lazar]

Kanyakumari district. But the Hon. Minister said that the Government did not intend to apply this Act to the Kanyakumari district, because that district had its own Act. I would like to know the correct position.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, we are amending the Parent Act, namely, the Madras Plantation Agricultural Income-tax Act, 1955. Since we are now amending this Act, the Amendment Act will apply only to that State as it originally stood without the Kanyakumari district. So this Amendment Act would not apply to the Kanyakumari district.

Clause 1 was put and carried.

The Preamble was put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 16 of 1958) as amended be passed."

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 16 of 1958) as amended be passed."

SRI P. G. KARUTHIRUMAN : சபாநாயகர் அவர்களே, இந்த விவசாய வருமான வரித் திருத்த மசோதா சட்டம் ஆகும்படியான இந்தத் தருவாயில், இதைக் கொண்டுவந்து மிகவும் சிறந்த முறையில் பரிசீலனை செய்து, செலக்ட் கமிட்டிக்கு விட்டு, மக்கள் அபிப்பிராயங்களைத் தெரிந்து நல்ல முறையில் கொண்டு வந்ததற்காக நான் சர்க்காரைப் பாராட்டுகிறேன். நான் ஒரு விவசாயி. முதன் முதலில் இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்தவுடனே ஆதரித்தவன். நான் நேரடியாகப் பார்த்து விவசாயம் செய்யக்கூடியவன். அதனால்தான் நான் இதை ஆதரித்தேன். யாரோ சொல்லிப் பேசுவதாக இருந்தால் நான் இதை ஆதரிக்க மாட்டேன். சில நண்பர்கள் சொன்னார்கள், ஏழை விவசாயிகளுக்கு நன்மை செய்ய வேண்டும், அதற்காகக் கீழ் வரம்பை அதிகப்படுத்த வேண்டும் என்று. இதிலே சில முக்கியமான விஷயங்கள் இருக்கின்றன. அவைகளெல்லாம் கவனிக்கப்படவேண்டிய விஷயங்கள். முதன் முதலாக இந்த மசோதா தயாரிக்கப்பட்ட நேரத்தில் எல்லா வருமானத்தையும் சேர்த்து கணக்குப் போட்டு வருமான வரி என்றிருந்தது. இரண்டாவது ஒவ்வொருவரும் கணக்கு வைத்துக் காட்ட வேண்டும் என்று முதன் முதலில் பிரசுரித்திருந்தார்கள். பல இடங்களில் விவசாயப் பொது மக்கள் நலனை உத்தேசித்து அவர்களுடைய கஷ்ட நஷ்டங்களை அமைச்சர் அவர்களுக்கும் சட்டசபை அங்கத்தினர்களுக்கும் தெரிவித்ததால், பொறுக்குக் கமிட்டியில் அவைகளைப் பரிசீலனை செய்து நல்ல முறையில் இந்த மசோதா திருத்தப்பட்டிருக்கிறது. இந்த மசோதா வந்தபிறகு உணவு உற்பத்தி குறைந்து விடும் என்று சிலர் கூறினார்கள். இந்த மசோதாவினால் உணவு உற்பத்தி குறையாது, ஆனால் அதிகப்படியாக ஏது இருக்கிறது. ஏனென்றால் இந்த வரி வருமான அடிப்படையில் இல்லாமல், விஸ்தீர்ணத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டிருக்கிறது. பன்னிரண்டரை ஏக்கருக்கு வரி கிடையாது. இந்த $12\frac{1}{2}$ ஏக்கர் என்பது நல்ல அயன் நஞ்சை. எட்டு ரூபாயும், அதற்கு மேலும் கந்தாயமுள்ள பூமி. அதிலிருந்து எத்தனை வரும்படி வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளலாம். குடியானவர்கள் உணவு உற்பத்தியைப் பெருக்க கவனமாக 11-00 a.m.

ஈடுபட்டு, எவ்வளவு உற்பத்தியைப் பெருக்க முடியுமோ அவ்வளவு பெருக்கி அதிலிருந்து வரக்கூடிய வருமானத்தை எடுத்துக் கொண்டால் அதிலே சர்க்கார் தலையிடாது. இது முதல் தர பூமிக்கு. இரண்டாம் தரம், தோட்டக்கால் பூமியாக இருந்தால் 20 ஏக்கர். மூன்றும் தரமான மானா வாரியாக இருந்தால் 35 ஏக்கர். இந்த 35 ஏக்கருக்கு மேலுள்ளவர்கள் 100-க்கு 10 பேர்களுக்கு மேல் சென்னை மாகாணத்தில் கிடையாது. இதனுல் யார் பாதிக்கப்படுகிறுர்கள், யார் வரி கொடுக்கப் போகிறுர்கள் என்று பார்த்தால், சர்க்காருக்கு இந்த வரியினுல் அதிகப்படியான வருவாயை எதிர்ப்பார்ப்பதை விட நிலச்சீர்த்திருத்தம் வேண்டுமென்று சொல்லுகிற காங்கிரஸ் கட்சியினுடைய நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகக் கொண்டுவரப்பட்டிருக்கிறதே தவிர, வருமானம் அதிகம் வேண்டுமென்ற நோக்கமல்ல என்பதை இந்தச் சபை உணரவேண்டுமென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

ஆகவே, இதிலே சாதாரண விவசாயிகள் கணக்கு வைத்துக் கொண்டு அதிகாரிகளுக்குக் காட்டி கஷ்டப்படும்படியில்லாத ஒரு நிலையை சர்க்கார் ஏற்படுத்திக் கொடுத்ததை நான் பாராட்டுகிறேன். வேறு வருமானங்களைச் சேர்க்காமல், விவசாயத்தில் வரக்கூடிய வருமானத்தை மட்டும் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று செய்திருப்பதையும் நான் பாராட்டுகிறேன். அதோடு மட்டுமல்ல. வருமானம் என்றுல் எது என்று பூரா விவசாயிகளுக்கும் ஒரு சந்தேகம் வந்துவிட்டது. வருமானம் என்றுல் நிகர வருமானமா, மொத்த வருமானமா, அல்லது செலவு நீக்கிய வருமானமா என்று புரியாமல் எல்லோருக்கும் பயம் இருந்தது. இன்கம்-டாக்ஸ் என்றுல் செலவு நீக்கியுள்ள வருமானம்தான் வருமானம். ஒரு ஏக்கர் நஞ்சையை எடுத்துக்கொண்டால் உற்பத்திக்கு ஆகக்கூடிய செலவு ரூ. 250. அதிலிருந்து வரக்கூடிய வருவாய் ரூ. 400. இதற்கு அக்ரிகல்சரல் இன்கம்-டாக்ஸ் ஆக்ட் பிரகாரம் வருமானம் ரூ. 150, ரூ. 100, ரூ. 150-க்கு மேல் போகாது. அது மட்டுமல்ல. தொழிலாளர்களுக்கு கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்கள்தான் ஏழைப்பங்காளன் என்று சொல்லிக் கொண்டு ரூ. 3,600 என்று இருப்பதை ரூ. 5,000 ஆக மாற்றவேண்டுமென்று சொன்னுர்கள். இதிலிருந்து பணக்காரர்களை ஆதரிப்பது கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்களா அல்லது காங்கிரஸ்காரர்களா என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இந்த விவசாய வருமான வரிச் சட்டத்தினுல், அநேகமாகக் கணக்கு வைத்துக்கொடுக்கக் கூடியவர்கள் ஆயிரம் பேர்கள்கூட இருக்கமாட்டார்கள் என்று நினைக்கிறேன். அவ்வளவு தூரம் இருக்கக் கூடியவர்கள் கணக்கு இல்லாமல் விவசாயம் செய்ய முடியாது. அநேக விவசாயிகளுக்கு உற்பத்தியைப் பெருக்குவதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கக் கூடிய முறையில் இந்த மசோதா அமைந்திருக்கிறது என்று கூறிக் கொள்ள விரும்புகிறேன். இந்த சந்தர்ப்பத்திலே தசரதன் எப்படி மக்களை ஆண்டு கொண்டிருந்தான் என்பதைப் பற்றிக் கம்பன் கூறியதைச் சொல்லாமல் இருக்க முடியாது. வெகு அற்புதமாகச் சொல்லி இருக்கிறுர். தசரதன் எப்படி ஆண்டான் என்றுல், ஒரு சிறு நில விவசாயி தன் பூமியை எப்படி காத்துக் கொண்டிருப்பானே, அது மாதிரி மக்களைக் காத்துக் கொண்டு வந்தான், அப்படி ராம ராஜ்யமாக ஆண்டு வந்தான் . . .

**Sri P. U. Shanmugam** : ஆன் எ பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன் . . . .

**Mr. Speaker** : இப்போது பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன் கேட்க முடியாது.

**Sri P. U. Shanmugam** : ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர், கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது பேசுகின்ற அங்கத்தினர், தசரதன் ராம ராஜ்யத்தை ஆண்டான் என்று புராணத்தைத் தலைகீழாகச் சொல்லுகின்றுரே, அப்படிச் சொல்லலாமா ?

20th September 1958]

**SRI P. G. KARUTHIRUMAN :** புராணத்தைப் பற்றித் தெரியாதவர்கள் இதிலே தலையிடுவது நல்லதல்ல என்று சொல்ல விரும்புகிறேன். ராமன் ஆண்டால்தான் ராம ராஜ்யம் என்பது அல்ல. ராம ராஜ்யம் என்பது ஒரு கன்செப்ஷன். ராம ராஜ்யம் தசரதனுக்கு முன்னாலே எப்படி இருக்க முடியும் என்று கேட்பது சரியல்ல.

**MR. SPEAKER :** தயவு செய்து விவாதத்தைப் பெருக்க வேண்டியதில்லை. உங்கள் பேச்சை முடித்துக் கொள்ளலாம்.

**SRI P. G. KARUTHIRUMAN :** " மிலினியம் " என்று சொல்லுகிறார்கள். கிருஸ்து பிறப்பதற்கு முன்னால் இத்தனை ஆண்டு என்று சொல்லும்போது, கிருஸ்து இந்த ஆண்டுதான் பிறப்பார் என்று முன்கூட்டியே சொல்ல முடியுமா என்று கேட்பது போல இருக்கிறது கனம் அங்கத்தினர் கூறுவது. ராமன் தான் ஆள வேண்டும், ராமன் ஆண்டால்தான் ராம ராஜ்யம் என்பது கிடையாது. இதை நன்கு புரிந்து கொள்ளவேண்டும்.

**MR. SPEAKER :** The hon. member need not put forward that **argument.** இன்னும் நேரம் இருக்கிறது என்பதற்காக ராமாயணத்தைப் பற்றி பேச வேண்டியதில்லை.

**SRI P. G. KARUTHIRUMAN :** இதற்கும் விவாதத்திற்கும் சம்பந்தமிருக்கிறது. ஒரு நல்ல சூழ்நிலையை ஏற்படுத்துவதற்காக, எல்லா மக்களும் நன்கு வாழவேண்டுமென்பதற்காக, சிறு விவசாயிகளுக்கு ஊக்கத்தைக் கொடுப்பதற்காக, சோம்பேரித்தனமாக கவனிக்கப்படாமல் இருக்கும்படியான நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டுவருவதற்காக ஏற்படுத்தப்பட்ட சட்டம் இந்தச் சட்டம். ராம ராஜ்யத்தை அமைக்க வேண்டும், சமதர்ம பாணியில் சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு இந்த முக்கியமான சட்டத்தை சர்க்கார் கொண்டு வந்ததை நான் பாராட்டுகிறேன். இந்தச் சந்தர்ப்பத்திலே ஒரு பாட்டைச் சொல்லி நான் முடித்துக் கொள்கிறேன்.

கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற வல்லாரு மில்லை
அவைவல்லர் அல்லாரும் இல்லை எல்லாரும் எல்லாப்பெருஞ்
செல்வமும் எய்த லாலே இல்லாரும் இல்லைஉடையார்
களும் இல்லை மாதோ.

ராம ராஜ்யம் ஏற்படுவதற்கு இந்தச் சட்டம் ஒரு முக்கியமான நிலையில் இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொண்டு, இந்தச் சட்டத்தை வரவேற்று முடித்துக்கொள்கிறேன்.

**SRI K. RAMACHANDRAN :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விவசாய வருமான வரிச் சட்டம் நிறைவேறக்கூடிய தருணத்திலே ஒரு சில வார்த்தைகள் மட்டும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த மசோதாவைக் கொண்டுவந்து விட்டதால், பிரமாதமான சீர்திருத்தத்தை கொண்டுவந்து விட்டோம் என்று சர்க்கார் நினைத்துவிடக்கூடாது. மந்திரி அவர்கள் ஏற்கனவே உறுதி சொன்னதுபோல, ' லாண்டு ரெவின்யூ ' இப்பொழுது இருக்கிற முறையிலே ஒரு கஷ்டமான வரியாக இருந்து கொண்டிருக்கிறது. மிகவும் "காம்ளிகேட்டாக" இருக்கிறது. அதைக் கூடிய வரையில் "பேஸிக் டாக்ஸ்ஸாக" மாற்றுவதற்கான நடவடிக்கையை சீக்கிரத்திலே எடுத்துக்கொள்ளவேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன். 11-10 a.m.

ரொம்ப நாட்களாக ஏதோ காரணங்களை ஒட்டி தள்ளிவைக்கப்பட்டு வரும் உச்ச வரம்புச் சட்டத்தை, இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்து விட்டோம் என்ற காரணத்தை வைத்துக்கொண்டு, ஓரிரண்டு வருஷத்திற்குத் தள்ளிவைக்கக்கூடாது. கூடியவரையில், வருகின்ற சட்டசபை கூட்டத் தொடரிலோ, அல்லது எவ்வளவு விரைவில் கொண்டுவரமுடியுமோ அவ்வளவு விரைவில் உச்ச வரம்புச் சட்டத்தை கொண்டுவரவேண்டுமென்று நான் சர்க்காரை கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri K. Ramachandran] [20th September 1958

சட்டத்தினுடைய ''ப்ரொவிஷன்களைப்'' பொறுத்த வரையில், ''12½ ஸ்டாண்டர்டு'' ஏகராவுக்கு, ரூபாய் 3,600–க்கு விதி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லுவதில் நான் பூரண திருப்தி அடையாவிட்டாலும் அது இப்பொழுது நிறைவேறவேண்டிய தருணத்திலே இருக்கிறது. இதிலே நான் பெரிய பண்ணை, சிறிய பண்ணை என்ற காரணத்தை வைத்துச் சொல்லவில்லை. பொதுவாக, சாதாரண விவசாயிகள், மத்தியதர வர்க்கத்தில் உள்ள விவசாயிகள் அதிகமாக பாதிக்கப்படுகிறார்கள். அதனால் கிராமத்திலுள்ள ''ரூரல் கிரெடிட் பெஸிலிடீஸ்'' பாதிக்கப்படும். விவசாய பொருளாதாரமே பாதிக்கக்கூடிய நிலைமை ஏற்படும். இதன் காரணமாகத்தான் இந்த விதிவிலக்கு வரம்பை சற்று உயர்த்தவேண்டுமென்று நாங்கள் திருத்தங்கள் கொடுக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டது. அந்தத் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இப்பொழுது இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப்படக்கூடிய தருணத்தில் இருக்கிறது. கூடியவரையில் ''ரூல் மேகிங் பவர்ஸை'' உபயோகித்து சர்க்கார் இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும் காலத்தில், விவசாயிகள் அதிகமாக பாதிக்கக்கூடாத நிலையில் கணக்கு கொடுக்கவேண்டியதை பொறுத்தவரையில், நல்ல முறையில் விதிகளை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தப்படியாக ''பீனல் புரோவிஷன்ஸைப்'' பொறுத்தவரையிலே அஸெஸ்மெண்டு அளவுக்கு அபராதம் விதிக்கலாம் என்பதை எடுத்தது பற்றி நான் சந்தோஷப்படுகிறேன். அதே சமயத்தில் செக்ஷன் 16–ஐ பொறுத்தவரையில், ''ரிடர்ன்'' கொடுக்காததற்குக்கூட அபராதம் விதிக்கலாம் என்றெல்லாம் இருக்கிறது. இம்மாதிரி புதுச் சட்டங்களை கொண்டு வரும்போழுது, சாதாரண விவசாயிகள் ''ரிடர்ன்'' போடுவது, கொள்ளுவது எல்லாம் செய்யமுடியாத நிலைமை இருப்பதால், இந்த '' புரோவிஷன்ஸை'' உடனடியாக உபயோகப்படுத்தாதபடி விதிகளை அமைக்க வேண்டும். கூடியவரையினும் பல பாதுகாப்புக்குப் பின்னால்தான் இந்தப் பிரிவுகளை அனுஷ்டிக்கக்கூடிய ஒரு நிலைமை இருக்க வேண்டும் என்பதை நான் வற்புறுத்திச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இந்தச் சட்டத்திற்கு 'ரெட்ராஸ்பெக்டிவ் எபெக்ட்' கொடுக்கப்படுகிறது. ஒரு வருஷத்திற்கு முந்தியே 1—4—1958–லிருந்து இது அமுலுக்கு வரும் நிலைமையில் இருக்கிறது. ஆகையினால் இதற்கு முன்காலத்தைப் பொறுத்தவரையிலும் கணக்குகள் அதிகமாக வைத்துக்கொள்ள முடியாத நிலை இருந்திருக்கலாம். அதையெல்லாம் மிகவும் வற்புறுத்தக்கூடாது. இதனால் அதிகாரிகள் கெடுபிடியாக விவசாயிகளைத் துன்புறுத்தமுடியாத நிலைமையில் 'ரூல் மேகிங் பவர்ஸின்' கீழ் சரியான விதிகளை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நான் ஏற்கனவே சொன்னபோதுபோல, இதை ஒரு பெரிய விவசாயச் சீர்திருத்தம் என்று கருதிக்கொண்டிராமல், மற்ற சீர்திருத்தங்களை உடனடியாகக்கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த சட்டத்தினால் விவசாயிகள் அதிகமாக பாதிக்கக்கூடாத வகையிலே 'ரூல் மேகிங் பவர்ஸை' உபயோகப்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

## II.—ANNOUNCEMENTS BY THE HON. SPEAKER—*cont.*

### (2) AMENDMENTS TO THE MADRAS PANCHAYATS BILL.

MR. SPEAKER : I have to make an announcement. For four days from Monday, the 22nd September, the House will discuss the Madras Panchayats Bill. I had originally fixed yesterday, the 19th September, as the last day for the receipt of amendments. But, at the request of several hon. Members, I have extended the time for the receipt of amendments to this Bill till 5 o'clock this evening. So, all amendments received up to 5 o'clock this evening will be considered.

20th September 1958]

SRI T. SAMPATH : Sir, I request that the time may be extended till tomorrow.

MR. SPEAKER : The House is likely to adjourn by 1 p.m. to-day. So, the hon. Members will have 4 clear hours for sending their amendments.

SRI T. SAMPATH : Sir, I am requesting further extension for the reason that the Bill contains over 200 clauses and we have to carefully study them before giving notice of amendments.

MR. SPEAKER : The hon. Member presumably forgets the fact that the Bill has been with him for 15 days.

SRI T. SAMPATH : But, we were engaged with the other Bills.

MR. SPEAKER : I have already extended the time till 5 o'clock this evening. There is a limit to everything.

SRI T. SAMPATH : It is only a request to you, Sir.

### IV.—GOVERNMENT BILLS—*cont.*

### (3) THE MADRAS PLANTATIONS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1958 (L.A. BILL NO. 16 OF 1958)—*cont.*

SRI A. S. SAHAJANANDA: கனம் தலைவர் அவர்களே, சிறு நிலச் சொந்தக்காரர்களுக்குச் சலுகை காட்டப்போகிறார்கள் என்று ஏற்கனவே ஆங்காங்கு பெரிய நிலச்சுவான்தார்கள் மனைவி, குழந்தைகள், மருமகள், இவர்கள் பேரில் நிலங்களை பிரித்துவிட்டார்கள். இப்போது விவசாய வருமான வரி குறைந்த அளவு நிலம் உள்ளவர்களுக்கு இல்லையென்றால், அதேமாதிரிதான் நிலங்களை பிரித்துவிடுவார்கள். அதனால் சர்க்காருக்கு வரக்கூடிய வருமானம் குறையும். சர்க்கார் வேறு இல்லை, ஜனங்கள் வேறு இல்லை. சிறு நிலச்சுவான்தார்களும், பெரிய நிலச்சுவான்தார்களும் எல்லோரும் வரி கொடுப்பதுதான் நியாயமாகும்.

இப்பொழுது அமுலில் இருக்கும் நியாயவாரச் சட்டம் ஒழுங்காக நடைபெறவில்லை. எங்கும் மிராசுதார்கள் இந்தச் சட்டத்தின்படி நடக்கவில்லை. யாரோ ஒருவர், இருவர் இந்தச் சட்டத்தை மதித்து அதன்படி நடக்கிறார்கள். காங்கிரஸ் மிராசுதார்கள்கூட இந்தச் சட்டத்தின்படி ஒழுங்காக நடக்கவில்லை. இந்த நிலையிலே ஜனங்களும் ஒழுங்காக நடந்துகொள்ளவில்லை. 60 வாரம் கொடுக்க வேண்டும் என்று சர்க்கார் சட்டம் போட்டிருக்கிறார்கள். ஆனால் மிராசுதார்கள் 30 வாரம்தான் கொடுக்கிறார்கள். அவர்கள் கையில் 60 வாரம் கொடுத்ததாக எழுதி வாங்கிக்கொள்ளுகிறார்கள். அதிகமாகக் கேட்டால் நிலத்தை கொடுக்க முடியாது என்று சொல்லுகிறார்கள். ரூபாய் 200, 300-க்கு பிராமிஸரி நோட்டு எழுதி வாங்குகிறார்கள். அதிகமாகக் கேட்டால் இந்தப் பணத்தை வசூல் செய்கிறார்கள். அதேமாதிரி சில இடங்களில் ஜனங்களும்கூட நிலத்தை வாங்கிக்கொண்டு வாரம் கொடுப்பதே இல்லை. அறுத்து எடுத்துக்கொண்டே போகிறார்கள். கேள்வி முறை கிடையாது. இந்தச் சட்டங்கள் வந்த பிறகு நாட்டில் உணவுப் பிரச்னை மோசமாக இருக்கிறது. விளைபொருள்கள் சரியாக உற்பத்தி செய்யப்படுவதில்லை. கூலி ஆள்களும் தாங்கள் வாங்குகிற கூலிக்கு ஏற்றவாறு வேலை செய்யவில்லை. புதிய சட்டங்கள் பலவற்றை போடுவதை விட, இருக்கிற சட்டங்களை ஒழுங்காக அமுல் நடத்துவது மிகவும் முக்கியமாகும். அதனால் இந்தத் திருத்த மசோதா வேண்டியதில்லை என்பது என்னுடைய அபிப்பிராயம்.

SRI N. K. PALANISAMI: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா கொண்டுவந்தது பற்றி சர்க்காரை நான் பாராட்டுகிறேன். வரி வசூல் செய்வதிலே ஒரு பெரிய மாற்றம் வேண்டும். அதிகப்படியான வருமானம் வரக்கூடியவர்களிடமிருந்து அதற்குத் தகுந்தவாறு வரி வாங்கவேண்டுமென்ற முறையிலே இந்த மகாணத்திலுள்ள விவசாயிகள் கிளர்ச்சி செய்துவந்தார்கள். அதன் காரணமாகத்தான் சர்க்காரும் கொள்கை அளவிலே இதை ஒப்புக்கொண்டு இம்மாதிரியான ஒரு மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறார்கள். ரூபாய் 3,600 வரை விலக்கு அளித்திருப்பதை ரூபாய் 5,000–க்கு உயர்த்தவேண்டுமென்று கம்யூனிஸ்டு கட்சி சொல்லுவது, நிலப்பிரபுக்களுக்கு ஆதரவாக இருக்கிறது என்று பேசப்பட்டது. ஆனால் இந்த வரம்பை உயர்த்தவேண்டுமென்று கம்யூனிஸ்டு கட்சி நினைக்கவேண்டிய காரணம் சாதாரண விவசாயிகள் நடுத்தர விவசாயிகளெல்லாம் பாதிக்கப்படக்கூடிய முறையிலே இந்த மசோதா அமையக்கூடாது என்பதுதான். ரூபாய் 3,600 வருமானம் வரக்கூடிய மத்தியதர விவசாயிகளுக்கு என்ன லாபம் வருகிறது என்பதைக் கவனிக்க வேண்டும். ரூபாய் 10,000 வருமானம் வருகின்ற, கணக்கு வைத்துக்கொண்டு குத்தகைக்கு விட்டு, கடன் கொடுத்து விவசாயிகளை சுரண்டுகின்ற பெரிய மிராசுதார்களுக்கு என்ன லாபம் வருகிறது என்பதைக் கவனிக்க வேண்டும். உணவு உற்பத்தியை அதிகப் படுத்துவதற்கு அவர்கள் பிரயோசனமில்லை. அம்மாதிரி நிலப்பிரபுத்துவத்தை மீட்கவேண்டுமென்று சொல்லுகிறோமே தவிர, மத்தியதர விவசாயிகளைச் சொல்ல வில்லை. முதலாளி

11-20 a.m. களை எடுத்துக்கொண்டாலும், நாட்டில் தொழில் வளரவேண்டுமென்று சொல்லிக்கொண்டு ஒரு முதலாளி ஒரு லட்சம் ரூபாய் லாபம் வந்தால் பீளமேட்டில் 10 மில்களைக் கட்டுகிறான். அவனே இம்மாதிரி பல மில்களை ஏற்படுத்தி பணத்தை சுரண்டுகிறான். இம்மாதிரி சொத்தை தேசத்திற்கு விரோதமாக செலவு செய்யக்கூடிய ஏகபோக முதலாளிகளை கட்டுப்படுத்தவேண்டும். ரூபாய் 3,600–க்கு விதிவிலக்கு கொடுத்திருப்பதை ரூபாய் 5,000–க்கு ஏற்றவேண்டுமென்று சொன்னது மத்தியதர விவசாயிகளுக்கு பாதுகாப்பு கொடுக்கவேண்டுமென்ற முறையில்தான். அந்த முறையிலே மத்தியதர விவசாயிகளுக்கு பாதுகாப்பு இல்லாமல் கொண்டு வந்து இருக்கிறார்கள். இதிலிருந்து சர்க்காருக்கு எவ்வளவு அக்கறை இருக்கிறது என்பது தெரிகிறது. இருந்தாலும், கொள்கையளவிலே, இந்தச் சட்டம் கொண்டு வந்ததற்காக, கனம் அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன்.

*SRI K. ANBAZHAGAN: சட்டமன்றத் தலைவர் அவர்களே, விவசாய வருமான வரி சட்டம் இன்று இந்த அவையில் நிறைவேறுவது கண்டு நான் மகிழ்கிறேன், பாராட்டுகிறேன். கடந்த ஏழு அல்லது எட்டு ஆண்டு காலமாக, ஆட்சியில் இருந்து வரும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த தலைவர்கள், வருமான வரி விரைவில் வருகிறது, வருகிறது என்று தெரிவித்தார்கள். ஆனால், ஏழு ஆண்டுகளுக்குப் பின்னர், இது நிறைவேறுகிறது. திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பொறுத்த வரையில், கடந்த ஏழு எட்டு ஆண்டுகளாகவே, வருமான வரி என்ற ஒன்றின் மூலமாக, அரசாங்கம், தக்கதோர் வரியைத் திரட்டி, அதைச் சிறந்த முறையிலே பயன்படுத்த வேண்டும் என்ற கருத்தை, பன்முறை தீர்மானித்து கூறி இருக்கிறது, திராவிட முன்னேற்றக் கழகம், சட்ட பூர்வமான மகாநாடுகளிலேயே, தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. ஆகவே, அப்படிப்பட்ட கொள்கையை ஒட்டி வருகிற இந்தச் சட்டத்தை வரவேற்பது என்னுடைய கடமை என்று கருதுகிறேன். இந்தச் சட்டம் வருவதற்கு முன்னாலே, நாட்டிலே கொண்டுவரப்பட்ட வேறு சட்டங்கள், விவசாயிகளைக் கட்டுப்படுத்தியிருக்கிறது. தடைப்படுத்தியிருக்கிறது. அந்தச் சட்டங்களிலே என்னென்ன குறைபாடுகள் இருந்தனவோ, அந்தந்தக் குறைபாடுகளுக்கு, இதுவும் ஆளாகக் கூடாது என்று நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நிர்வாக முறையிலே, ஒரு சட்டத்தை நிறைவேற்றும் நேரத்திலே, குறைபாடுகள் ஏற்படும் என்பதை இந்த அவையில் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த முது பெருந் தலைவர், சுவாமி சகஜானந்தா அவர்கள், இதற்கு முன்னால் நிறைவேற்றப்பட்டுள்ள சட்டங்களிலே உள்ள கஷ்ட

நஷ்டங்களை, குறைபாடுகளை, காங்கிரஸிலே இருக்கிற மிகப் பெரிய நிலச்சுவான்தார்கள் கூட, அந்த சட்டங்களை ஏற்று நடப்பதில்லை, என்பதை விளகுவது மூலம் எடுத்துக் காட்டினார்கள். அப்படி சட்டம் நிறைவேற்றும் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், சில பெரிய மிராசுதார்கள், தங்கள் தங்கள் சுயநலத்தால் உந்தப்பட்டு, சட்டங்களுக்கு உட்பட்டு நடப்பதில்லை என்று அறிவித்தார்கள். ஆகவே, அப்படிப்பட்ட முறையை அந்த மிராசுதார்கள், இந்த சட்டத்திலும் கையாளாமல் இருக்க வேண்டு மானால், அரசாங்கம், இதைச் செவ்வையாக நிறைவேற்ற வேண்டும். அப்படிச்செவ்வையாக நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லுகிற நேரத் திலே, அதிகாரிகள் நடுத்தர மிராசுதார்களை, ரூபாய் 3,600–க்கு மேற்பட்ட வருமானம் இல்லாதவர்களைச் சேர்ப்பதற்கும், இடமில்லாமல் பாதுகாப்பு இருக்க வேண்டும். ரூபாய் 3,600லிருந்து, ரூபாய் 5,000 என்பதில் இருக்கும் வேற்றுமையை விட, இந்தச் சட்டத்தை நிறைவேற்றுகிற வர்கள், மக்களைக் கசக்கிப் பிழியும் முறைகளைக் கையாள்கிறார்களா, அல்லது அவர்களுக்கு நியாயமான உரிமைகளை அளித்து, தக்க முறையிலே வரி வசூலிக்கிறார்களா என்பதைப் பொருத்துத்தான், இந்த சட்டத்தின் பயன் விளையும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

காங்கிரஸ் கட்சிக் கொரடா—அவர்கள் பேசும் நேரத்தில், இன்றைய சூழ்நிலைக்கு மாறாக பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, தசரதர் காலத்திய ராமராஜ்யத்தில், சுபிட்சம் இருந்ததாகக் குறிப்பிட்டார்கள். அந்தக் காலத்தில், சுபிட்சமாக இருந்திருக்கலாம். தசரதன் 60,000 மனைவிகளையும் கட்டுப்படுத்தி வைத்திருந்தார் என்று ராமயணத்தில் படிக்கிறோம். அந்தவல்லமை படைத்தவர் ஒருக்கால், ஓரளவு சுபிட்சத்தை மக்களிடையே தோற்றுவித்திருக்கக்கூடும். ஆனால், இன்றைய தினம், இருக்கும் நிலைமையில், அமைச்சர் அவர்களாயிருந்தால் இரண்டு மனைவிகள் இருந்தால் நிலைமை திண்டாட்ட மாகிவிடும், திண்டாட்டமான சூழ்நிலை காரண மாக, ஒரு குடும்பத்தை நடத்தத் தேவையான அடிப்படை வசதிகளைத் தேடித் தரவேண்டியது அரசாங்கத்தின் பெரும் பொறுப்பாகிவிடும். ஆகவே, நாளை இந்தச்சட்டத்தை நிறைவேற்றும் நேரத்தில், ஏழை மக்கள், நடுத்தர வகுப்பார் பாதிக்கப்படாத நிலைமை இருக்க வேண்டும்.

கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த நண்பர், பேசும்போது வியாபாரிகளுக்கு அதிக லாபம் வருகிறது ஆனால் அவர்களுக்கு விதிக்கக்கூடிய வரி முறையை விட இது அதிகமாக இருக்கிறது, இது விவசாயிகளைப் பாதிக்கும் என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். வியாபாரிகளைப் பொருத்த வரை யில், நான் அவர்களை ஆதரித்துச் சொல்லவில்லை—வியாபாரிகளுக்கு ஒரு ஆண்டில் ரூபாய் 1,000 லாபம் வரும், அல்லது இருக்கிற முதலீட்டில் ரூபாய் 5,000 நஷ்டம் ஏற்படும், அவ்விதம் ''பளக்சுவேஷன்'' இருக்கும். மிகுதியாக குறையலாம், உயரலாம். பெரிய மிராசுதார்களைப் பொருத்த வரையில், ஒரு நிலையான வரும்படி, முதலீட்டுக்கு நஷ்டமில்லாத அளவுக்கு, நியாயமான, உண்மையான பயன் உண்டு. எனவே, விவசா யிகளுடைய வருமானத்தைக் குறிப்பிடும் நேரத்தில், அதை வியாபாரிகளின் வருமானத்தோடு, லாபத்தோடு ஒப்பிடுவது நல்லதல்ல என்று நான் கருதுகிறேன்.

எல்லாவற்றையும் விட, நான் அரசாங்கத்தை வேண்டிக் கேட்டுக்கொள்வது, நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டும் என்பது கனம் அமைச்சர் அவர்கள் பேசும் நேரத்தில், நில உச்ச வரம்பு கட்டு வதற்கும் இதற்கும் சம்மந்தமில்லை, நிலத்திற்கு உச்சவரம்பு கட்டுவது, நிச்சயமாக அதற்குரிய முறையில் வரும், இந்தச் சட்டம் தனிப்பட்டது என்று குறிப்பிட்டார்கள். அதே நேரத்தில், காங்கிரஸ் கட்சிக் கொரடா, இது அதற்கு வழி காட்டி என்று சொன்னார்கள். அப்படி இது அதற்கு வழி காட்டியென்று கொண்டால், இந்தச் சட்டம் வர இடையூறுகள் ஏற்படக்கூடும். உச்சவரம்பு கட்டுவது, சமுதாயத்தில் சமநீதி தோற்றுவிக்க முயல்வதாகும்—வருமான வரி, வரி வசூலிக்க மட்டும்தான்—இந்த இரண்டுக்கும் இடையில் ஓரளவு தத்துவ வேறுபாடு இருக்கிறது. அதை நன்றாக உணர்ந்து, இந்தச் சட்டமே

அதற்கு வழி காட்டி என்று சொல்லி இந்த சட்டம் கொண்டு வந்த காரணத்தால், உச்சவரம்பு கட்டும் சட்டத்தை வெகு நீண்ட நாட்களுக்கு தள்ளிப்போட்டுவிடக்கூடாது என்று அமைச்சரவைக்கு தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்தச் சட்டம் வந்தபின், உச்சவரம்பு கட்டுவது இன்றியமையாத, அடுத்த கடமையாகக் கருதி, அந்தச் சட்டத்தையும் நம் அமைச்சர்கள் செய்ய முற்படவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். உச்ச வரம்பு கட்டும் சட்டத்தைத் தள்ளிப் போட்டு, வேறு எந்தச் சட்டத்தை நிறைவேற்றுவதாலும் ஏற்படக்கூடிய நன்மை மக்களுக்கு பயன்படாது என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மேலும் இப்பொழுது போடும் வருமான வரியின் நோக்கம், இந்த வரியை வசூலிப்பதுமட்டுமல்லாமல், இன்றையதினம் இருக்கும் நில வரியை நாளடைவில் திருத்தியமைக்கப் பயன்படவேண்டும் என்று விரும்பகிறேன். நாளடைவில் நில அளவு அடிப்படையில் இருக்கும் வரியை ஒரே வரியாக அமைக்க வேண்டும். எத்தனையோ வரிகள்—தண்ணீர் வரி, நில அடிப்படையில் வரி, துணை வரிகள். வருமான அடிப்படையில் மட்டும் வரி விதிக்கும் நிலைமையை அரசாங்கம் மாற்றிக்கொள்ள வேண்டும். சோஷலிச சமுதாயத்தை அமைப்போம் என்று, காங்கிரஸ் கட்சி சொல்லுகிற நேரத்திலே, அந்த முறையிலே, கொள்கையை வகுத்துக் கொண்டு, துணைச் சட்டங்களை, மிக விரைவில் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த சட்டத்தை நிறைவேற்றுவதில் குறைபாடுகள் ஏற்படாதவாறு—இப்பொழுது விற்பனை வரி அல்லது வணிக வரியில் உள்ள சில குறைபாடுகள் போன்றோ வேறு சில சட்டங்களிலுள்ள குறைபாடுகள் போன்றோ குறைபாடுகள் நேராவண்ணம், நிர்வாகத்தில் திறமை வேண்டும், அதற்குத் துணையான சட்டங்களைக் கொண்டு வரவேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு, இதனை வரவேற்று என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI P. S. K. LAKSHMIPATHI RAJ :** தலைவர் அவர்களே, விவசாய வருமான வரியைக் கொண்டு வந்த அமைச்சர் அவர்களைப் பாராட்டிச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். அதோடு, விவசாய வருமான வரி என்பது தமிழகத்திலே முதன் முறையாக வருகிறது. அதைப் பலகோணங்களிலிருந்து பார்க்க வேண்டும். வருமான வரியைப் பற்றிக் குறிப்பிடும்போது, இந்தியாவின் இன்றைய உணவுப் பஞ்சத்தை எந்த அளவில் வரி முறை சீராக்கும் என்பது எனக்கு மனதில் சந்தேகத்தைக் கிளப்புகிறது. விவசாயிகளை உற்சாகப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது என்பது தெரிந்ததே. ஆனால், நிலப் பரப்பு அதிகமாக வைத்துக்கொண்டிருக்கும் விவசாயிகளுக்கு வரி விதிக்க வேண்டும் என்று, இந்த வருமான வரி மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது.

குறைந்தது ரூ. 3,600 வரும்படி வரக்கூடிய விவசாயிகளுக்கு வரி என்ற அமைப்பில், வரும்படியின் தன்மையை உணரவேண்டும். ஒரு வியாபாரிக்கு தான் போடும் முதலீட்டுக்கு, ஒரு குறிப்பான வருமானம் வருகிறது. இந்த விவசாயம் செய்யும்போது, பல தொல்லைகள் இருக்கின்றன என்பதைக் கவனத்தில் வைக்க வேண்டும். பருவகாலங்கள் சரியாக இருந்து, அவன் உழுது பயிரிட்டு, அறுத்து நல்லபடியாக வீடு கொண்டு வந்து சேர்த்தால்தான், வருமானம். ஏதாவது சந்தர்ப்பக் கேட்டினால், ஒரு பருவம் தவறினால், இந்த வருமானத்தை பார்க்க முடியாது, தண்ணீர் இறைக்க முடியாது, பயிர் மோசமாகி விடும். காற்று, மழை, வெயில், பனி இவைகளால் வருமானம் பாதிக்கப்படும். விவசாயிகள் மீது அனுதாபம் காட்ட வேண்டும், அவர்களுக்கு இரக்கம் காட்ட வேண்டும், சலுகை காட்டவேண்டும் என்கிற ரீதியில் பல இடங்களிலே பேசப்படுகிறது. இந்த அடிப்படையில் பார்க்கும் போது, வருமான வரியானது கொண்டுவரப்படுகிற அமைப்பில், அந்த முறையை சமாளித்து இருக்க முடியும், உச்ச வரம்பு கட்டியிருந்தால். பக்கத்திலே உள்ள ஆந்திரப் பிர

11-30 a.m. தேசத்தில் நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவதற்கான மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். வருமானத்தின் வரம்பை 5,400 ரூபாய் என்று நிர்ணயித்து, அந்த அடிப்படையிலே கொண்டு வந்திருக்கிறார்கள்.

இங்கேயும் உச்ச வரம்பை நிர்ணயிப்பதற்கான ஒரு சீர்திருத்தத்தைக் கொண்டு வந்தால் இந்த வரிக்கு தேவை இருக்காது. இவ்வளவு சிரமமான ஒரு வரியைக் கொண்டு வருவதைவிட உச்ச வரம்பு மசோதாவைக் கொண்டு வந்திருக்கலாம். ஆனால் இந்த சட்டம் நிறைவேறிவிட்டதால், யாருக்கும் இம்சை இல்லாத வகையில் வரி வசூல் செய்யும் முறையை அரசாங்கம் மேற்கொள்ள வேண்டும். விற்பனை வரி கொண்டு வந்த காலத்திலே அது வியாபாரிகளைக் கொடுமைப்படுத்தும், அவர்களை தொந்தரவுக்கு உள்ளாக்கும் என்று அப்போது யாரும் நினைக்கவில்லை. எழுதப்படிக்கத் தெரியாத விவசாயிகள் நம் தமிழ் நாட்டில் அதிகமாயிருப்பதால், இந்த சட்டத்தின்படி அவர்கள் கணக்குகளைச் சரியாக வைத்துக்கொள்ளவில்லை என்று சொல்லி, அவர்கள் மீது கர்ண கடூரமான நடவடிக்கைகளை எடுத்தால், அவர்கள் இந்த வரியையும் சபிப்பார்கள், அரசாங்கத்தையும் சபிப்பார்கள். ஆகவே இதைச் சுலபமாக அமலாக்குவதில் அரசாங்கம் கண்ணும் கருத்துமாய் இருக்கவேண்டும். இந்த வரி விதிப்பைக் கொண்டுவந்தது காங்கிரஸ் அரசாங்கம். விவசாய வருமான வரி போடவேண்டுமென்று காங்கிரஸ் சொன்னதே கிடையாது. ஆனால் நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டுமென்று சொல்லியிருக்கிறது. கனம் அன்பழகன் அவர்கள் சொன்னதுபோல், 7, 8 வருஷங்களாக இந்த மாதிரி வரி கொண்டுவரப்போகிறோம் என்று சொன்னதே கிடையாது. இந்தச் சமயத்திலே ஏன் கொண்டு வந்திருக்கிறோம் என்று சொன்னால், இப்பொழுது நம்முடைய மாகாணத்திலே பல நல்ல திட்டங்களை நிறைவேற்றி வருகிறோம். நமது இந்தியப் பிரதமர் ஸ்ரீ ஜவஹர்லால் நேரு அவர்கள், இந்தியாவிலுள்ள ஒவ்வொரு ராஜ்யமும் நிலச் சீர்திருத்தத்தை சீக்கிரத்திலே அமுலுக்குக் கொண்டுவரவேண்டும், நில உடமைக்கு வரம்பு கட்டவேண்டும், விவசாயிகள் உற்சாகத்தோடு விவசாயத் தொழிலில் ஈடுபட வேண்டும் என்று ஆயிரக்கணக்கான கூட்டங்களிலே பேசியிருப்பதை பத்திரிகைகளிலே நாம் பார்த்திருக்கிறோம். ஆகவே நிலச் சீர்திருத்தத்தை சீக்கிரமாகக் கொண்டுவரவேண்டும். இந்த வரியைக் கொண்டுவந்திருக்கிற அரசாங்கம், உச்ச வரம்பு மசோதாவை முன்னிட்டுக் கொண்டு வந்திருந்தால், இந்த வரிக்கு அவசியமே இருக்காது. நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டியிருந்தால் நன்றாக இருந்திருக்கும். என் போன்றவர்கள் சொல்வதெல்லாம், ஒருவனுக்கு 1,000 ஏக்கர், ஒருவனுக்கு 5 ஏக்கர், ஒருவனுக்கு $\frac{1}{2}$ ஏக்கர் என்று இருக்கும் வித்தியாசம் போகவேண்டும் என்பதுதான். நகரப் புறங்களைக் கண்ணுறும் விவசாயிகள் மிகவும் சோர்ந்து போய்விடுகிறார்கள்.

(Deputy Speaker in the chair.)

காரணம் என்னவென்றால், நகரப் புறங்களிலே இருக்கிறவர்களுக்கு அரசாங்கம் நல்ல வசதிகளைச்செய்து கொடுக்கிறதே, நமக்குச் செய்யவில்லையே என்ற ஏக்கம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. மோட்டார் ஓட்டும் தொழிலாளி முதல் விமானம் ஓட்டும் தொழிலாளி வரையிலும், நாட்டிலுள்ள மக்கள் அனைவருக்கும் உணவுப் பொருள்கள் உற்பத்தி செய்யும் விவசாயிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். கந்தல் உடை கட்டிக்கொண்டும், குடியிருப்பதற்கு வசதியான இடம் இல்லாமலும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையில், அவர்களுக்கு அநுகூலமாக இருக்கும் வகையில் நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டியதற்கான மசோதாவைக் கொண்டு வந்திருந்தால் நான் சந்தோஷப்பட்டிருப்பேன். பெரிய நிலச்சுவான்தார்களுக்கு "லகான்" போடுவது போன்று இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. சர்க்கார் கஜானாவில் பணம் இல்லை என்ற காரணத்திற்காக இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறதே தவிர, ஒரு லட்சியத்தின் அடிப்படையில் இது கொண்டு வரப்படவில்லை என்று சில அங்கத்தினர்கள் இங்கே சொன்னார்கள். உச்ச வரம்பு கட்டுவதற்கு முன்னோடியாக இதை எடுத்துக்கொள்ள வேண்டுமே தவிர, கஜானாவில் பணமில்லை என்பதற்காக கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று சொல்லுவது மிகவும் விநோதமாக இருக்கிறது. சட்ட சபையிலுள்ள அங்கத்தினர்களில் பெரிய மிராசுதார்களும் இருக்கிறார்கள். விவசாய வேலையில் ஈடுபட்டிருப்பவர்களும் இருக்கிறார்கள். இருந்தாலும் கூட, பல நிலச்சுவான்தார்களைக் கொண்ட

காங்கிரஸ் கட்சிதான் இந்த சட்டத்தைக் கொண்டுவந்து அமலாக்கியிருக்கிறது என்பதைப் பார்த்து நாம் பெருமைப்படுகிறோம், மகிழ்ச்சிபடுகிறோம், அதனை வரவேற்கிறோம் என்று சொல்லிக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

*SRI A. R. SUBBIAH MUDALIAR: மூன்றுவது வாசிப்பின் போது என்னுடைய உற்சாகத்தைத் தெரிவிக்கும் முறையில் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த வரி விதிப்பினால் ஒரு உற்சாகமான முன்னேற்றமான காரியத்தை நம்முடைய சர்க்கார் செய்கிறது எனபதை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். 12½ ஏக்கருக்கு கீழ்பட்ட நிலச்சுவான்தார்கள், தங்களுக்கு இந்த வரியில்லை, ஆகவே எவ்வளவு பாடுபட்டாலும் தங்களைப் பாதிக்காது, தங்களுக்கு ஒருவிதமான இடைஞ்சலும் இதனால் ஏற்படவில்லை என்ற வகையில் இன்னும் உற்சாகமாக வேலை செய்வார்கள். 12½ ஏக்கராவுக்கு மேற்பட்டவர்கள், அதாவது இந்த வரியினால் பாதிக்கப்படுகிறவர்கள் இந்த வரி வந்து விட்டது, சட்டப்படி அதை "கம்பவுண்டு" பண்ணிக்கொள்ளலாம், ஆனால் மூன்று வருஷத்திற்கு வரியை—அதே விகிதத்தைத்—தொடர்ந்து கட்டவேண்டிய காரணத்தினால், நஷ்டம் ஏற்பட்டு விடக்கூடாது என்று இன்னும் அதிக உற்சாகத்துடனும், ஜாக்கிரதையுடனும் விவசாயம் செய்வார்கள். ஆகவே உணவு உற்பத்தி பெருகுவதற்கு இது ஒரு அடிகோலாக இருக்கும். கம்பவுண்டு பண்ணும் முறையானது ஒரு குறடு போல் அமைந்திருக்கிறது. இந்த வருஷம் ஒருவர் "கம்பவுண்டு" செய்துவிட்டால், இன்னும் மூன்று வருஷத்திற்கு நஷ்டம் ஏற்பட்டாலும், ஏற்கெனவே கம்பவுண்டு பண்ணின தொகையைக் கொடுக்க வேண்டுமென்பதுதான் குறிக்கோள். இது ஒரு விதத்தில் நல்லது என்று நான் நினைக்கிறேன். ஏனென்றால் 12½ ஏக்கருக்கு மேற்பட்டு நிலம் வைத்திருப்பவர்கள் கொஞ்சம் ஜாக்கிரதைக் குறைவாக பயிரிட்டு வந்தால், அதனால் ஏற்படும் நஷ்டத்தை அவர்கள் தான் பொறுக்கவேண்டியிருக்கும். அரசாங்கத்திற்கு மூன்று வருஷம் வரையிலும் கம்பவுண்டு செய்த வரியைத்தான் கட்ட வேண்டியிருக்கும். ஆகவே அவர்களும் ஜாக்கிரதையுடன் பாடுபடுவார்கள். என்ன விதமான விவசாயச் செலவு ஏற்பட்டாலும் அதற்கு கணக்கு வைக்க வேண்டும். இதில் சில கஷ்டங்கள் ஏற்படும் என்பது உண்மைதான். ஆனால் அதற்காக நாம் பின்வாங்கக் கூடாது. வருமானவரி (Income-tax) கொண்டுவந்த நேரத்திலும் இந்தமாதிரிக் கஷ்டங்கள் இருந்தன. நாளடைவில் இது சரியாய்ப்போய்விட்டது. வருமான வரி செலுத்துபவர்களுக்கு கணக்கு வைத்துக் கொள்ளும் அனுபவம் ஏற்பட்டுவிட்டது. பக்கத்து கிராமத்திலிருப்பவர் ஒருவிதமாக விவசாயக் கூலி கொடுக்கலாம். அதே மாதிரி உரம் போடுவதிலும் வித்தியாசம் இருக்கும். உத்தியோகஸ்தர்களும் தவறுதல் இருப்பதாக நினைத்து தீர்ப்பளிக்கலாம். நல்ல உரம் போட்டு, அதன் மூலம் உற்பத்தியைப் பெருக்கி, அதிக வருவாய் தேடிக் கொள்ளுகிறவர்களுக்கு இந்த வரி மூலமாக நஷ்டம் ஏற்படாது. ஆகவே கம்பவுண்டிங் முறைக்கு உட்பட்டவர்கள் ஜாக்கிரதையுடன் விவசாயத்தில் ஈடுபடுவதற்கு வாய்ப்பு இருக்கிறது.

இந்தக் காரியத்திற்கும் பின் சர்க்காருடைய அடுத்த நல்ல திட்டம் உருவாகும் என்று நினைக்கிறேன். பயிர்களுக்கு இன்ஷூரன்ஸ் திட்டத்தைக்கொண்டு வரவேண்டும். பயிர்களுக்கு இன்ஷூரென்ஸ் திட்டத்தைக் கொண்டு வந்தால் அதன் மூலம் விவசாயிகள் நன்மையை அடைவார்கள் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புறேன். கிராமங்களில் பயிர்களுக்கு நோய் கண்டிருப்பதைப் பார்க்கலாம். அப்படி நோய் வரும்போது விவசாயிகளுக்குத் துணையாக இருந்து என்ன செய்ய வேண்டும் என்றும் சொல்வதற்கு ஆட்கள் கிடையாது. அதிகாரிகளுடைய அனுபவ வாய்ப்பு கிராமவாசிகளுக்குக் கிடைப்பது இல்லை. ஏனென்றால் தாலூகா பூராவிற்கும் ஒரு விவசாய டிமான்ஸ்ட்ரேட்டர் பார்க்க முடியாது. கிராமங்களில் ஏற்படக்கூடிய லாப நஷ்டம் என்ன பயிர்களுக்கு நோய் வந்தால் அதைத்தடுப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்று காலா காலத்தில் சொல்வதற்கு அதிகாரிகள் அங்கே கிடையாது. அப்படிச் சொல்வதற்கு

ஆட்கள் இல்லாமல் இருப்பதால் விவசாயிகள் நஷ்டமடைகிருர்கள். ஆனுல் க்ராப் இன்ஸ்ஷுரன்ஸ் திட்டம் வந்து விட்டால் இன்ஷுரன்ஸ் ஏஜெண்ட் அடிக்கடி கிராமங்களுக்குச் சென்று எந்தந்தக் காலங்களில் பயிர்களுக்கு நோய் வரும், அதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்றெல்லாம் சொல்வதற்கு வசதி ஏற்படும். க்ராப் இன் ஷுரன்ஸ் சட்டம் செய்தால் விவசாயம் தெரிந்த ஏஜெண்டுகளைத் தான் அங்கே அனுப்புவார்கள். அவர்கள் எந்தெந்த இடங்களில் எந்தந்த விதமான பயிரிட வேண்டும் என்றும் எப்பொழுது விதை விதைக்க வேண்டும் என்று சொல்லிக்கொடுத்து நோய் வராமல் இருப்பதற்கு என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று முன் கூட்டியே தகவல் சொல்லுவார்கள். இப்படி அவர்கள் பார்த்து வந்தால் பயிர் களுக்கு அதிக நோய் வராது, அதிகப்படியான உற்பத்தியும் பெருகலாம். அதிகமான வருவாயும் விவசாயிகளுக்குக் கிடைக்க ஏதுவாக இருக்கும். நோய் வருவதற்கு மற்றொரு காரணம், பருவ மழை காலா காலத்தில் இல்லாதது. க்ராப் இன்ஷுரன்ஸ் மூலமாக நோயைப் போக்கி அதிகப் படியான உற்பத்தியைப் பெருக்குவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. ஆகவே இந்தத் திட்டத்தை சர்க்கார் கொண்டு வந்தால் விவசாயிகளுக்கும் பயிரிடு வதில் நல்ல உற்சாகம் ஏற்படும்.

இதைப்போலவே சிறிய நீர்ப் பாசன திட்டத்திற்கு அதிகப்படியான வசதி கொடுத்து முதலீடு கொடுக்க வேண்டும். இப்படிப்பட்ட திட்டங்கள் ஜில்லாதோறும் இருக்கின்றன. இந்தத் திட்டங்களைத் தகுந்தபடி கவனித்தால் நல்ல நன்மை ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. சிறிய நீர்பாசன திட்டங்களுக்கு நாம் வழி செய்து விட்டால் நமக்கு "அஷ்யூர்ட் சப்ளை" கிடைத்து விடும். சர்க்காருக்கு திட்டமான வருமானம் வருவதோடு மறை முகமாக விவசாயிகளுக்கு நன்மை ஏற்படுகிறது. அதன் மூலம் பல நன்மைகள் ஏற்படும்.

அதே மாதிரி கிணறுகள் வெட்டும் திட்டம். சப்சிடி ஸ்கீம் மூலம் மானியம் கொடுத்து கிணறுகளை வெட்டி அதன் மூலமாக நல்ல பயனை அடையலாம். பல கிராமங்களில் அப்படிக் கிணறுகள் வெட்டுவதற்கு மானி யம் கொடுத்து உதவி செய்தால் உணவு உற்பத்தி பெருகுவதோடு சர்க் காருக்கு வரி மூலமாக வருமானமும் கிடைக்கிறது. அதனுல் விவசாயி களும் நன்மை அடைகிருர்கள். அதனுல் நாட்டிற்கும் நன்மை ஏற்படு கிறது. இப்படிப்பட்ட நல்ல வேலைகளைச் செய்தால் விவசாயிகளுக்கு நன்மை ஏற்படுவதோடு அவர்கள் இன்னும் அதிகப்படியாக வேலை செய் வதற்கும் உற்சாகம் ஏற்படும். ஆகவே இந்த மசோதாவை நான் மனப் பூர்வமாக ஆதரிக்கிறேன். இந்தச் சட்டம் கண்டிப்பாக வரவேண்டியது தான். இதனுல் நாடு முன்னேற்றம் அடையும், அதன் மூலம் உணவு அதிகப்படியாக உற்பத்தியாகும் என்பதை தெரிவித்துக்கொண்டு எனக்குப் பேசுவதற்கு வாய்ப்பு கொடுத்தமைக்கு என்னுடைய வந்தனத்தைத் தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRIMATHI RAJATHI KUNJITHAPATHAM: கனம் தலைவர் அவர்களே, விவசாய வருமான வரி மசோதாவை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். இந்த மசோதாவை, ஆளும் கட்சியினர் மட்டும் அல்ல, எதிர்க்கட்சியில் இருக்கிற அங்கத்தினர்கள் கூட, ஏகோபித்து போற்றி ஏற்றி, பாராட்டிப் பேசியதைக் கேட்பதற்கு மிகவும் மகிழ்ச்சிகரமாக இருக்கிறது எங்களுக்கு என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இருந்தபோதிலும் ஆளும் கட்சியினர் கொண்டு வந்த ஒரு நல்ல சட்டம் எல்லோரும் ஏகமனதாக போற்றப்படுகிற காலத்தில் அது அரசியல் வானில் நன்ருக இருக்கிறது என்று நினைக்காமல் ஒரு சில சொட்டைகளை கனம் எதிர்க்கட்சி அங்கத்தினர்களில் சிலர் குறிப்பிட்டார் கள். முக்கியமாக நில உச்ச வரம்பு கட்டுவது இதனுல் தடைபடக்கூடாது என்று எல்லோரும் ஏகோபித்துச் சொன்னுர்கள். விவசாய வருமான வரி வருவதற்கு முன்னதாகவே தொழில் அதிபர்கள் வரி கொடுத்து வந்தார்கள். அப்படிப்பட்ட தொழில் அதிபர்கள் தொழில் செய்வதனுல்

வரி கொடுக்க வேண்டியதாக இருக்கிறது என்ற காரணத்தால் அதிலிருந்து தப்பித்துக்கொள்வதற்கு தங்களுடைய பணத்தை முனிசிபல் எல்லைக்குள்ளும் பஞ்சாயத்து எல்லைக்குள்ளும் வீடுகள் வாங்கும் அளவில் செலவு செய்து வந்தார்கள். அப்படி வீடுகளை வாங்கிப் போட்டால் வீட்டு வரி வசூலித்துக்கொண்டு சம்பாதிக்கலாம். அதன் மூலம் தொழில் மூலமாக வரி கொடுக்காமல் தப்பித்துக்கொண்டு விடலாம் என்று அப்படிச் செய்து வந்தார்கள். தங்களுடைய பணத்தை தொழிலில் போட்டாலும் சரி வீடுகளில் போட்டாலும் சரி அதன் மூலம் வரி கொடுக்காமல் தப்பித்துக்கொண்டு விடலாம் என்று அப்படிச் செய்ய முற்பட்டார்கள். அதற்கு வரி வசூலிக்கப்படும் என்ற நிலைமை ஏற்பட்ட போது அவர்கள் தங்களுடைய பணத்தையெல்லாம் அங்கே இருக்கக்கூடிய நிலங்களில் போட்டு அவற்றை வாங்கி வைத்துக்கொண்டு சம்பாதிக்கலாம் என்று நிறைய நிலங்களை வாங்க ஆரம்பித்தார்கள். இந்த நாட்டை விட்டு அந்நிய நாட்டிற்குச் சென்று, அதாவது சிலோன், பர்மா முதலிய இடங்களுக்குச் சென்று சம்பாதித்து வந்தவர்கள் தங்களுடைய பணத்தைக் கொண்டு ஏக்கரா ஏக்கராவாக நிலங்களை வாங்க ஆரம்பித்தார்கள். சர்க்காருக்குக் கொடுக்கக்கூடிய வரியைக் கொடுக்காமல் தப்பித்துக்கொண்டு விடலாம் என்று நிலங்களை வாங்கி வைத்துக்கொண்டார்கள். தொழிற்சாலையை நடத்தினால் வரி கொடுக்க வேண்டியதாக இருக்கிறது; சினிமா நடத்தினால் வரி கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. இம்மாதிரி எந்த தொழிலை நடத்தினாலும் வரி கொடுக்கும்படியாக இருக்கிறது என்று ஏக்கர் ஏக்கராக நிலங்களை வாங்க ஆரம்பித்தார்கள். ஆனால் இப்பொழுது நிலங்களின் மூலமாக வரக்கூடிய வருமானத்திற்கும் வரி போடுவதாக ஏற்படுகிறது. ஆனால் எதிர்க்கட்சிக்காரர்கள் ஏதாவது சொல்ல வேண்டும் என்பதற்காக சிலவற்றைச் சொல்லுகிறார்கள். அவர்கள் எப்பொழுதும் போலவே இப்பொழுதும் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். அப்படிச்சொல்லும்போது காங்கிரஸ் சர்க்கார் பெரிய பணக்காரர்களுக்கு ஆதரவு கொடுக்கிறார்கள் என்றும் சொல்லுகிறார்கள். " புலி வருகிறது, புலி வருகிறது " என்று சொல்லி ஒரு மாட்டு இடையன் உயிர் இழந்ததைப்போல் காங்கிரஸ் சர்க்கார் பெரிய பணக்காரர்களுக்கு ஆதரவு கொடுக்கிறார்கள் என்று சொல்லிக்கொண்டு, பெரிய முதலாளிகள் வரி கொடுக்காமல் இப்படிச் சொல்லிக்கொண்டு தப்பி விடலாம் என்று நினைக்கிறவர்கள் எப்படி மாட்டு இடையன் புலி வருகிறது, புலி வருகிறது என்று சொல்லி எல்லோரும் உதவிக்கு வந்து புலி வராமல் போய், அவர்கள் திரும்பியவுடன் மறுபடியும் புலி வருகிறது என்று இடையன் சொன்னவுடன் அவனைக் காப்பாற்ற வந்தவர்கள் வராமல் இருக்கவே அந்த மாட்டு இடையன் தன்னுடைய உயிரை இழந்ததுபோல் இப்பொழுது வரியைக் கொடுக்காமல் தப்பித்துக்கொள்ளலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கக் கூடியவர்கள் பிற்பட்டு இந்த வரியிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாமல் போய் விடும். ஆகவே வரி கொடுக்காமல் தப்பித்துகொண்டிருக்கிறவர்கள் இனி மேல் வரி கொடுக்காமல் தப்பித்துக்கொள்ளவே முடியாது. இப்படிப்பட்ட வரவேற்கத்தக்க அம்சம் உள்ளதாக இந்தச் சட்டம் இருக்கிறது. இந்தப் பெருமை காங்கிரசுக்கே போய் விடக்கூடாது என்பதற்காக அவர்கள் சொல்லுவது எப்படி இருக்கிறது. என்றால் ஒரு வெற்றி ஊர்வலம் போய்க்கொண்டிருக்கிறது, அவற்றிற்கு பின்னால் இவர்கள் வருகிறார்கள். அவர்களும் இந்த வெற்றியில் பங்கு கொள்ளவேண்டும் என்பதற்காக ஊர்வலம் நிற்கும்போது நிற்கட்டும் என்று சொல்லுவது போல, இன்று இம்மசோதாவையும் போற்றுகிறார்கள், தாங்களும் அதில் பங்கு கொள்ள வேண்டும் என்பதற்காக. அவர்களால் வேறு ஒன்றும் சொல்ல முடியாது. ஊர்வலம் நின்றால் நிற்கட்டும் போனால் போகட்டும் என்ற அளவில் அவர்கள் இருக்கிறார்கள். அந்த அளவில் இந்தச் சட்டத்தை வரவேற்கிறோம் என்று சொல்லுகிறார்கள். ஊர்வலத்தில் கலந்து கொள்வதற்காக அவர்கள் அப்படிச் சொன்னது போல் இதிலும் சொல்லுகிறார்கள் என்று தோன்றுகிறது. ஆகவே எல்லோரும் ஒன்று பட்டு வரவேற்கக் கூடிய அம்சம் இதில் இருக்கிறது. உச்ச வரம்பு 3,600 ரூபாய் என்று வைத்திருப்பது மிகவும் போற்றத்தக்கது. 12 எக்கர் வைத்திருப்பதும்

20th September 1958] [Srimathi Rajathi Kunjithapatham]

ரொம்பவும் சரியானது தான். சாதாரணமாக நம் நாட்டில் சுமார் பத்து ஏக்கர் வைத்துக்கொண்டிருக்கக்கூடியவரும் பணக்காரர்தான். இந்தச் சட்டம் மத்திய தர வகுப்பினரை பாதிக்காது. மத்திய தர வகுப்பினருக்கு இது நன்மையைத்தான் கொடுக்கும், சாதகமாக இருக்கும். அவர்களுக்கு முன்னேற்றத்தைக் கொடுக்கக்கூடியதாக இருக்கிறது. அவர்களுடைய முன்னேற்றத்தைத் தடுக்கக்கூடியதாக இருக்கக்கூடாது என்பதற்காக 3,600 ரூபாய் என்று வைத்திருப்பது ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கிறது. 5,000 ரூபாய் என்று வைத்தால் அது ஏற்றுக்கொள்வதற்கு தடையாக இருக்கும். இம்மாதிரியான மசோதாவைக் கொண்டு வந்ததற்கு மக்களால் போற்றப்படுகிறோம். மக்களால் போற்றத்தக்க முறையில் இது இருக்கிறது. இது அவர்களுக்கு நல்ல விருந்தாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொண்டு இதை ஏகமனதாகப் பாராட்டிக் கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI P. S. CHINNADURAI**: மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, விவசாய வருமான வரி சம்பந்தமாக மசோதா நிறைவேற இருக்கிற தருணத்தில் மீண்டும் ஒரு விஷயத்தை நினைவு படுத்த விரும்புகிறேன். இந்த ராஜ்யத்திலுள்ள வருவாய் வரக்கூடிய ஊற்றுகள் எல்லாம் வற்றிபோய் விட்டன போலக் கருதி இந்த விவசாய வருமான வரி கொண்டு வரப்பட்டிருக்கிறதாக சாதாரணமாக மக்கள் சந்தேகிக்க கூடிய நிலைமையில் தான் இது நிற்கும் என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். பணம் இல்லை அதனால் வரி போடுகிறோம், பட்ஜெட்டை சரிக்கட்டுவதற்கு இந்த வரியைப் போடுகிறோம் என்று கனம் அமைச்சர் அவர்கள் நேற்றையதினம் சொன்னார் அதையேதான் மசோதாவிலும் குறிப்பிட்டிருக்கிறார். இதர வருவாய் வரக்கூடிய ஊற்றுக்கள் எவ்வளவோ இருக்கின்றன. அவைகளைப்பற்றி கவனிக்க இந்த அமைச்சர் அவை கவலை கொள்ளவில்லை. அப்படி வரக்கூடிய வருவாய்களில் எல்லாம் கவலை கொள்ளாமல் பணக்காரர்களுக்கு வரி போட்டு விட்டோம் பெரிய நில பிரபுக்களுக்கு வரி போட்டு விட்டோம் என்று சொல்லி கொள்வதற்குத்தான் இந்த மசோதா கொண்டு வரப் பட்டிருக்கிறது என்பது என்னுடைய கருத்தாகும். மக்கள் உண்மையில் நல்ல பால் கேட்கிறார்கள். இது கலப்படமான பால். இன்னும் சொல்லப்போனால், கலப்படம் மட்டும் அல்ல. வெறும் மாவைக் கரைத்து பால் என்று கொடுக்கிறார்களோ என்று கூட நான் நினைக்கிறேன். ஏனென்றால். மக்கள் கேட்பது நிலச் சீர்திருத்தம்; விரிவான நிலச் சீர்திருத்தத்தை, மிகவும் துரிதமான முறையிலே நிறைவேற்றி வைக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள். நிலத்திலே அதிகமான தொழில்-முதலாளிகள் பணத்தைப் போட்டு நில பிரபுக்களாக மாறிவருகிறார்களே என்று ஒரு அங்கத்தினர் குறிப்பிட்டார். அப்படி நிலப்பிரபுக்களாக மாறி வருகிற அத்தகைய நபர்களைக் கட்டுப்படுத்தக்கூடிய முறையிலே போடப்பட்டிருக்கிறது என்று சொல்வது சரியல்ல. நிலப் பிரபுக்களாக மாறி வரும் நபர்களை உண்மையிலேயே கட்டுப்படுத்த வேண்டுமென்றால் அதற்கு விரிவான நிலச் சீர்திருத்தம் தான் தேவை. ஒருவன் இவ்வளவு ஏக்கருக்கு மேலே நிலம் வைத்திருக்கக்கூடாது என்று கட்டுப்படுத்தி நிலத்தை உண்மையிலேயே யார் உழுது பாடுபடுகிறார்களோ அவர்களுக்குத்தான் நிலத்தின் மீது உரிமை இருக்கவேண்டுமே தவிர அதற்குப்பதிலாக விவசாய வருமான வரி போட்டுவிட்டோம் என்று சொல்வது சரியானதாக இருக்காது என்று நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். 11-50 a.m.

ரூ. 3,600 வருமானத்திற்குமேலே வரி என்று போடுகிறோம். பெரிய மிராசுதார்கள் இந்தச் சட்டத்தினாலே தங்கள் கீழே வேலை செய்யக்கூடிய விவசாயத் தொழிலாளர்களுடைய சம்பளத்தைக் குறைத்துவிட மாட்டார்கள் என்பதற்கு எங்கேயாவது நாம் உத்தரவாதம் அளித்திருக்கிறோமா? ஒரு அணா கூலி குறைத்தால் அதற்கும் உத்தரவாதம் செய்யவில்லை. அது மாத்திரம் அல்ல. கோவை ஜில்லாப் பகுதியில் 60 : 40 சட்டம் இல்லாத இடங்களில் மிராசுதார்கள் குத்தகையை உயர்த்தினால், வரி போட்டு விட்டார்கள், அதனாலே குத்தகையை உயர்த்துகிறோம் என்று சொல்லி

குத்தகையை உயர்த்தினால் அப்படி உயர்த்தாமலிருப்பதற்கு, பாதுகாப்புக் கொடுத்திருக்கிறோமா ? ஆயிரம் ரூபாய்க்கு குத்தகைக்கு விட்டிருந்த ஒரு மிராசுதார், வரி போட்ட பிறகு, அதாவது இந்தச் சட்டம் அமுலுக்கு வந்த பிறகு, ரூ. 1,500 குத்தகை கொடுத்தால் தான் நிலத்தைக் குத்த கைக்கு விடுவோம் இல்லாவிட்டால் நிலத்தைக் குத்தகைக்கு விட முடியாது என்று சொன்னால், அதற்குப் ப துகாப்பு எங்கே இருக்கிறது ? சட்டத்தின் மூலமாக அவர்களுக்குப் பாதுகாப்பு சரியான முறையில் வழங்கப்பட வில்லை. " குத்தகைதார்களை நிலத்திலிருந்து வெளியேற்ற முடியாது " என்று சொல்லுகிறோமே தவிர, ஆனால், அவர்களுக்கு உண்மையிலே பாதுகாப்பு இல்லை. கோவை ஜில்லா குத்தகைதார்களைக் கேட்டால்தான் இதன் உண்மை தெரியும். நிலப் பிரபுக்களுக்கு நன்றாகத் தெரியும் ; எப்படியெல்லாம் சட்டத்தை மீற முடியுமோ, அதற்கெல்லாம் ரொம்ப துணிச்சலான முறையிலே, திறமையான முறையில், குத்தகைதார்களை வெளியேற்றுவது எப்படி என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். குத்தகையை உயர்த்துவதையும், கூலி குறைக்கப்படுவதையும் தடுப்பதற்கு நாம் வசதி செய்து கொடுக்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளு கிறேன்.

இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட விரும்புகிறேன். சொந்தமாக தோட்டம் வைத்திருக்கிறவர்கள்—வாய்க்கால் மூலமாக பாசனம் உள்ள பூமியை நான் குறிப்பிடவில்லை—அதைப் பற்றி சற்று கவனிக்கவேண்டும். தோட்டக்கால் பாசனத்தின் கீழ் எல்லாவிதமான தானியங்களும் இருக்கக லாம். பருத்தி, புகையிலை, நவதானியங்கள், மிளகாய், காய்கறி போன்ற வைகளை உற்பத்தி பண்ணுகிறவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய குடும்பத்திற்குத் தேவையான காய்கறிகளையோ, தேங்காய்களையோ, பருப்பு வகையறுக்களையோ அவ்வப்போது தோட்டத்திலேயிருந்து எடுத்துக்கொள் கிறார்கள். அவைகளைச் " செலவு " என்ற ஐடத்திலே குறைத்துக் கொள்ளப் போகிறோமோ அப்படிக் குறைத்துக்கொண்டால் அது அங்கீ கரிக்கப்படுமா அல்லது அவைகளுக்கும் கூட கணக்குக் காட்ட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமா ? இதுபற்றியெல்லாம் இந்த மசோதாவில் ஒன்றும் காணப்படவில்லை. இதில் இல்லாவிட்டாலும், விதிகள் இயற்றும்போதா வது கவனிக்கப்படுமா என்பது தெரியாது. அமைச்சர் அவர்கள் இதைக் கருத்திலே கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மசோதா எப்படியும் நிறைவேறிவிடும். என்னுடைய சம்மதமோ, ஆசியோ இருந்தாலும் இல்லாவிட்டாலும் நிறைவேறப் போகிறது என்று எனக்குத் தெரியும். எப்படியிருந்தாலும் விதிகள் இயற்றும்போது, குடும் பத்திற்காக உபயோகப்படுத்துகிற காய்கறி வகைகள், தானிய வகைகள் இவைகளை செலவு ஐடமிலே சேர்த்துக்கொள்ள வேண்டுமேயொழிய, வருமானம் என்று சேர்த்துக்கொண்டால் மனம் புண்படுவார்கள் என்று நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

* Sri K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா சட்டமாகும் இந்த நேரத்திலே ஒரு சில வார்த்தைகள் சொல்ல அவாவுறுகிறேன்.

இந்த மசோதாவைப் பல அங்கத்தினர்களும், எதிர்க் கட்சி அங்கத் தினர்களும் வரவேற்றார்கள். ஆனால், இந்தச் சட்டம் நிலச் சீர்திருத் தத்திற்கு முன்னோடியாக அமையவேண்டுமேயன்றி, நிலச் சீர்திருத் தத்தைக் காலதாமதம் செய்வதற்குள்ள சட்டமாக அமைந்துவிடக் கூடாது. இதை அமுல் நடத்தும்போது பல்வேறு சிக்கல்கள் எழும் என்று எனக்குத் தெரியும். ஏனென்றால், எங்கள் வட்டாரத்தில் நாங்கள் இதுபோன்ற ஒரு சட்டத்திற்குட்பட்டு, கழிந்த பல ஆண்டுகளாக வரி கொடுத்து வருகிறோம். அந்த அடிப்படையில், இந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரும்போது, குறிப்பாக உத்தியோகஸ்தர்களுக்கு திட்டவட்டமாக சர்க்காரிடமிருந்து உத்தரவு பிறப்பிக்கப்படவேண்டும். சாதாரணமாக உண்டாகும் (ஹராஸ்மெண்ட்) உபத்திரவம் இல்லாத முறையில், ஓரளவு

20th September 1958] [Sri K. Sattanatha Karayalar]

விவசாயிகளைப் பொறுத்தமட்டில், நடத்தவேண்டும். எழுதப் படிக்கத் தெரியாத விவசாயிகளைப் பொறுத்தமட்டில் மிகக் கருணையோடு கவனிக்க வேண்டும். கொடுமையாக சில இடங்களிலெல்லாம் சட்டத்தைப் பிரயோகப் படுத்தியதனால் பல்வேறு துன்பங்களும் ஏற்பட்டு, சுப்ரீம் கோர்ட் வரையில் வழக்குகள் சென்றிருக்கின்றன. அந்த வகையில் சந்தர்ப்பம் எழாத முறையில் இந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரவேண்டும்.

சட்டத்தை அமுலாக்கும்போது இதிலே ஒரு சில சிக்கல்கள் உண்டா கலாம். சில இடங்களில் குறிப்பிட்ட ஒரே பயிர் இடுகிற இடங்களாக இருக்காது. " கம்பைன்ட் " ஆகப் பயிரிடும் முறை கன்யாகுமரி மாவட் டத்தில் உண்டு. அங்கு தென்னை, கமுகு, நெல் முதலிய பல்வேறு பயிர்கள் ஒரே தோட்டத்திலே, ஒரு சில ஏக்கரிலே பயிரிடப்பட்டதாக இருக்கும். அதிலே குடியிருக்கும் வீடும் அமைந்திருக்கும். அதுபோன்ற இடங்களில் இந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரும்போது, சில சிக்கல்கள் எழும். அதை நான் பொறுக்குக் கமிட்டியிலே கிளப்பினேன். அதற்கு நடைமுறை அனுபவத்திலே தான், எந்த முறையிலே பரிகாரம் தேட முடியும் என்று தெரிவிக்கப்பட்டது.

அதோடு மட்டுமல்லாமல் இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்த அமைச்சர் அவர்கள் இதைத் தொடர்ந்து இப்பொழுது இருக்கக்கூடிய நிலவரி முறையையும் மாற்றியமைப்பார்கள் என்று நான் எண்ணுகிறேன். இது ஒரு முற்போக்குச் சட்டமாக " **Basic Tax** " அடிப்படையில் இருக்கவேண்டும். இன்று இருக்கும் நிலத் தீர்வை முறை மிகப் பிற்போக்கான தன்மையில் இருக்கிறது. பேஸிக் என்ற அடிப்படையிலே அடிப்படையாக ஒவ்வொரு ஏக்க ருக்கும் டாக்ஸ் ஒரு குறிப்பிட்ட ரேட்தான் இருக்கவேண்டும். எல்லா நிலத் திற்கும் யூனிவர்சல் பேஸிக் டாக்ஸ் அமையவேண்டும். அப்படி பேஸிக் டாக்ஸ் அமைந்தால் மாத்திரம் தான் இந்தச் சட்டம் அதிகமான அளவுக்கு பயன் அளிக்குமே அல்லாது, அதுவரையில் முழுப் பயனையும் அளிக்காது. அப்பொழுதுதான் அது நியாயமாக அமையும். ஆகையால், இன்று அடிப் படையாக இருக்கும் தீர்வை முறையை மாற்றி, ஒரு யூனிவர்ஸல் பேசிக் டாக்ஸ் கொண்டுவருவதற்கான நடவடிக்கையை இதைத் தொடர்ந்து அமைச்சர் அவர்கள் எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த மசோ தாவைப் பாராட்டுவதோடு, இதைக் கொண்டுவந்த மந்திரி அவர்களுடைய முற்போக்கு எண்ணத்தையும் நான் பாராட்டுகிறேன்.

***Sri V. K. RAMASWAMY MUDALIYAR :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, விவசாய வருமான வரி மசோதா நிறைவேறும் இத்தருணத்தில் நான் இரண்டொரு வார்த்தைகளை மட்டும் சொல்லிக் கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

நாங்கள் பொறுக்கமிட்டியிலிருந்து பலவித யோசனைகளைச் சொன்னோம். கடைசியில் " டிஸ்ஸென்டிங் மினிட் " எழுதி, அதில் அனேக விஷயங்களைப்பற்றி குறிப்பிட்டிருக்கிறோம். விவசாய வருமான வரி போடுவதில் ஒருவருக்கும்-முக்கியமாக எங்கள் கட்சியைச் சேர்ந்த ஒருவருக்கும் ஆட்சேபணை இல்லை. ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்று வதற்கு வரிகள் போட்டு, நல்ல முறையிலே அரசாங்கம் மக்களுக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்யவேண்டும் என்பதுதான் எங்களுடைய அபிப்பிராயம். ஆனால், அந்த வரி போட்டு வசூலிக்கும் தருணத்தில் மக்களிடமிருந்து நல்ல முறையில் வசூலிக்க வேண்டும் என்பதுதான் எங்களுடைய முக்கியமான கொள்கை. விவசாயிகளிடமிருந்து வரி வசூலிப் பதென்றால் அனேகவிதமான கஷ்டங்கள் இருக்கின்றன. நிலங்களின் தரம் ஜில்லாவுக்கு ஜில்லா மாறுபட்டிருக்கும் ; கிராமத்திற்குக் கிராமம் மாறுபட்டிருக்கும் ; கிராமத்திலேயே ஒரு பகுதிக்கும் இன்னொரு பகுதிக்கும் கூட தரத்திலே மாறுபாடு உடையதாக இருக்கும். அனேக வித மாறுதலுக்கு உட்பட்டு அவ்விடத்தில் விவசாயிகள் பயிர்செய்து வருகின் றார்கள். அந்தந்த பூமியிலிருந்து வருமானம் வருவது பற்றி கணக்கு எடுப்பதில் அனேக வித வித்தியாசங்கள் ஏற்படும். அப்படியிருக்கும்

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [20th September 1958

நேரத்தில், இது எந்த முறையில், அவர்களெல்லாம் கணக்கு வைத்து, அவர்களிடமிருந்து வசூலிப்பது என்பது பற்றி சர்க்காரால் நியமிக்கப்படும் உத்தியோகஸ்தர்கள் நன்றாக யோசித்து ஒருவித புகாருக்கும் இடமில்
12 noon. லாமல் இந்த வரியை வசூலிக்கவேண்டுமென்பதுதான் எங்களுடைய கொள்கை. பயிர் செய்யும் காலத்திலும் சரி, அறுவடை காலத்திலும் சரி, களை எடுக்கும் காலத்திலும் சரி அங்கங்கே அநேக வித்தியாசங்கள் இருக்கின்றன. இவைகளுக்குச் சரியான முறையில் கணக்கு வைக்க வேண்டும். அந்தக் கணக்குகளைப் பரிசிலனை செய்யும் அதிகாரிகள் அவற்றை ஒப்புக் கொள்ளவேண்டும். இப்போது இருக்கிறதைவிட சர் ஜார்ஜ் போட்டிருப்பதை 75 லட்சம் ரூபாய் கூட இல்லாமல் இரண்டு கோடி வரையில் வசூலிக்கலாம் என்று சொன்னேன். வரியே போடக்கூடாது என்று சொன்னவர் யாரும் கிடையாது. வருமான வரி போடுவதில் உள்ள கஷ்டங்களை நன்கு உணர்ந்து அதிகாரிகளுக்கு எடுத்துச் சொல்லி, விவசாயிகளுக்கு யாதொரு கஷ்டமும் நேரிடாமல் நல்ல முறையில் பரிசீலித்து இந்த வரிகளை நிர்ணயிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதிலும் முக்கியமாக சொந்த சாகுபடி செய்ய பெரிய பண்ணைகளுக்கும் சரி, மத்திய தரப் பண்ணைகளுக்கும் சரி அநேகவிதமான சலுகைகளை நாம் கொடுத்தாகவேண்டும். இதுவரையிலும் அவர்கள் தங்களுக்குக் கீழ் வேலை செய்யும் விவசாயிகளுக்கு அவர்கள் எவ்வளவோ கொடுத்து வந்திருக்கிறார்கள். கடனாகவும், இனாமாகவும் அநேக குடும்பங்களுக்கு அவர்கள் உதவி வருகிறார்கள். உத்தியோகஸ்தர்கள் இப்போது இந்தச் செலவுகளை எல்லாம் ஒப்புக்கொள்ளாமல் போகலாம். இந்தமாதிரியாகக் கொடுக்கப்படும் சலுகையின் மூலமாகச் செலவாகும் தொகையையும் அதிகாரிகள் ஏற்றுக்கொள்வதற்குச் சில விதிகளை ஏற்படுத்த வேண்டும். தவிர கால்நடை இல்லாமல் விவசாயிகளால் தங்கள் பண்ணைகளைப் பாதுகாக்க முடியாது. நோயின் காரணமாகவும், இயற்கையின் காரணமாகவும் பலபல சமயங்களில் இந்தக் கால்நடைகளுக்குச் சேதம் உண்டாகும். விவசாயி மறுபடியும் கால்நடைகளை வாங்கியாக வேண்டும். தவிர வயலுக்கு எரு வாங்கிவைக்கச் செலவும் ஆவதுண்டு. உற்பத்தியைப் பெருக்குவதற்கு அனுகூலமாக இருக்கவேண்டும் என்கிற நோக்கத்தோடு செய்யும் இந்தச் செலவுகளுக்கு எல்லாம் விவசாயிகளுக்குச் சலுகை அளித்தாகவேண்டும். விதிகளை ஏற்படுத்தும் காலத்தில் விவசாய மக்களுக்கு இந்த வரியினால் எவ்விதமான கஷ்டமும் உண்டாகாமல் இருப்பதற்கு எல்லாவிதமான சலுகைகளையும் அளிக்க வேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

தவிர நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டுமென்று அநேக அங்கத்தினர்கள் பேசினார்கள். எனக்கும் அப்படிச் செய்வதில் எவ்வித ஆட்சேபணையும் இல்லை. கண்டிப்பாகச் செய்யவேண்டுமென்று சொல்பவர்களில் நானும் ஒருவன். ஆனால் எப்படி உச்ச வரம்பு கட்டுவது, ஒவ்வொரு குடும்பத்திற்கும் எவ்வளவு ஏற்படுத்துவது, இதைப்பற்றியெல்லாம் யோசித்தாக வேண்டும். அதிலும் நிலங்களில் பலதரங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு கிராமத்தில் இருக்கக்கூடிய நிலங்களுக்கு மேல் ஜனத்தொகை இருக்கின்றன. குறைவாக இருக்கக்கூடிய கிராமங்களும் பல இருக்கின்றன. ஆகவே நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவது என்பதைப்பற்றி எல்லாக் கட்சிகளும் நன்றாக யோசனை செய்து சொன்னால் நன்றாக இருக்கும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். விவசாயத் துறைக்கு மட்டும் உச்ச வரம்பு கட்டுவது என்பது சரியல்ல. உச்ச வரம்பு கட்டும் காலத்தில் எல்லோருக்கும் கட்ட வேண்டும். இதையும் யோசிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். முக்கியமாக இந்தச் சட்டத்தின் கீழ் விதிகளை ஏற்படுத்தும் போது, இலாகா சிப்பந்திகளால் விவசாயிகளுக்கு எந்தவிதமான தொந்தரவும் வராத வகையில், பலவிதமான சலுகைகளை சர்க்கார் கொடுக்கவேண்டுமென்பதாகக் கேட்டுக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

*THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் அநேக வரி மசோதாக்கள் கொண்டு வந்து நிறைவேற்றியிருக்கிறேன். ஆனால் இந்த வரி மசோதாவுக்குக் கிடைத்த நல்ல

வரவேற்பு வேறு எந்த மசோதாவுக்கும் கிடைக்கவில்லை. அதிலிருந்து என்ன விளங்குகிறதென்றால் மக்கள் பிரதிநிதிகள் தங்களுடைய பொறுப்பை நன்கு உணர்ந்து, தற்கால நிலைமையையும் நன்கு உணர்ந்து செயல்படுகிறார்கள் என்பது தெரிகிறது. அதன்காரணமாகவே இந்த மசோதாவை வரவேற்று இருக்கிறார்கள். குறிப்பாக இந்த மசோதாவினால் அதிகம் பாதிக்கப்படக்கூடியவர்களும் கூட கருத்திருமன், அர்த்தநாரீஸ்வர கவுண்டர் இவர்களும் கூட இந்த மசோதாவை சிரிப்பு முகத்துடனேயே வரவேற்று இருக்கிறார்கள்.

அவர்களும் இந்த மசோதாவை சிரித்த முகத்துடன் வரவேற்றிருக்கிறார்கள் என்றால், அது அவர்களுடைய நற்குணத்தையும் பொறுப்புணர்ச்சியையும்தான் காட்டுகிறது என்று சொல்ல விரும்புகிறேன். சர்க்கார் தங்கள் வருவாயை அதிகரித்துக் கொள்வதற்காகவே இந்த மசோதாவைக் கொண்டுவந்ததாக சில கனம் அங்கத்தினர்கள் கூறினார்கள். அப்படி இல்லை. சர்க்கார் தங்களுக்குப் பணம் வேண்டுமென்பதற்காக இதைக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்பது ஓரளவு வாஸ்தவம். ஆனால் விவசாயிகளிடமிருந்து வரி வசூலிக்கும் போது, அவர்களுடைய விவசாய வருமானத்தின் மீது வரி விதிக்க வேண்டும் என்ற கொள்கைக்காகவும், இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. அதாவது, நிலத்திற்கு வரி போடும் கொள்கையையே மாற்றி யமைக்கவேண்டும் என்பது இந்த மசோதாவைப் பொறுத்த வரையில் சர்க்காரின் நோக்கம். நிலத்திலிருந்து விவசாயிக்குக் கிடைக்கும் வருமானத்தின் மீது வரி விதிப்பது தான் நல்லது என்று நிலச் சீர்திருத்தக் கமிட்டிகளும் கூறியிருக்கின்றன. "ப்ளாண்டேஷன்ஸ்" துறையில் இம்மாதிரி வரி விதிப்பதற்கான சட்டத்தை முதலில் கொண்டு வந்தோம். அந்தச் சட்டத்தின் பலனை கடந்த இரண்டு-மூன்று வருஷங்களில் கண்டோம். அதைப் பார்த்த பிறகு இப்போது இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறோம். இந்த மசோதாவை எல்லோரும் கொள்கையளவில் ஒப்புக்கொண்டார்கள். ஆனால், கேரளா வருமான வரிச் சட்டத்தில் எந்த அடிப்படையில் வரி விகிதங்கள் நிர்னயிக்கப்பட்டிருக்கின்றனவோ, அதே அடிப்படையில் இந்த மசோதாவிலும் வரி விகிதங்கள் நிர்ணயிக்கப்பட வேண்டாமா என்று கனம் அங்கத்தினர்கள் கேட்டார்கள். நாம் இயற்றும் சட்டம் அமுலுக்கு வந்த பிறகு, சர்க்காருக்கு இந்த இனத்தில் எவ்வளவு வரி கிடைக்கிறது என்பதையும், விவசாயிகளின் நிலைமை எப்படி இருக்கிறது என்பதையும் பார்த்துவிட்டு அதற்குப் பின்னர் சட்டத்தில் அவசியமான திருத்தங்களைச் செய்யலாம். இப்போது இயற்றும் சட்டத்திலேயே எல்லாவற்றையும் சரியாக நிர்ணயிக்கவேண்டும், இல்லாவிட்டால் நான் முன்பு குறிப்பிட்ட விவரங்களைத் தெரிந்துகொள்ளும் வரையில் சட்டமியற்றக்கூடாது என்றால், அதுவரையில் நமக்கு வரக்கூடிய வருமானம் வராமல் போய்விடும்; நாம் கஷ்டப்படுவோம். ஆகையால், முதலில் இயற்றப்படும் சட்டம் நடைமுறையில் எவ்வாறு இயங்குகிறது என்று பார்த்த பிறகு தான் ஒரு நீண்ட காலச் சட்டத்தை—"லாங் ரேஞ்ச்" சட்டத்தை கொண்டுவர முடியும். நீண்ட காலம் என்றால் ஒரு வருஷம் அல்லது இரண்டு வருஷம் என்று அர்த்தம் என்று சில கனம் அங்கத்தினர்கள் சொன்னார்கள். நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை.

12-10 p.m.

சர்க்கார் மசோதாவைக் கொண்டுவந்திருப்பதால், நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் மசோதாவைக் கொண்டுவருவதைத் தாமதப்படுத்துவார்கள் என்று சொல்லப்பட்டது. அவ்வாறு கனம் அங்கத்தினர்கள் ஐயப்பட்டார்கள். அந்த ஐயத்திற்கே இடமில்லை. ஏனென்றால், இந்த மசோதவிற்கும் நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் காரியத்திற்கும் சம்பந்தமே இல்லை. இந்த மசோதா வரி வசூலிக்கும் முறையைத் திருத்தியமைக்கிறது. ஆனால், இந்த மசோதா விதிக்கும் வரியிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக பல நிலச்சுவாந்தார்கள் தங்கள் நிலங்களை பிரித்துக் கொள்ள முயலக்கூடும். அந்த முறையில் அவர்கள் ஒரு உச்ச வரம்பை ஏற்படுத்தக்கூடும். நான் இந்தச்சபையில் ஒரு வார்த்தையைச் சொல்லலாமானால், சட்டத்திற்கு "டிமிக்கி" கொடுப்பதற்காக அவர்கள் அவ்வாறு

[Sri M. A. Manickavelu] [20th September 1958

செய்வார்கள் என்று சொல்வேன். அவர்கள் அவ்வாறு உச்ச வரம்பை ஏற்படுத்துவதை நாம் எப்படி கட்டுப்படுத்த முடியும்? ஆகையால், நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டுவதற்குச் சட்டமியற்றுவதற்கும் இந்த மசோதாவிற்கும் சம்பந்தமில்லை. அரசாங்கம் நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டத் தான் விரும்புகிறது; அதற்கு முயற்சி செய்துகொண்டிருக்கிறது; அத்த முயற்சியைக் கைவிடுவதாக இல்லை. உணவு உற்பத்தியை பாதிக்காத முறையில் நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டவேண்டும். இதை நாம் எல்லோரும் இப்போது முன்னைவிட நன்றாக உணருகிறோம். ஏனென்றால், இன்று உணவு உற்பத்தி மோசமாக இருக்கிறது. சமதர்ம சமுதாயத்தை அமைக்க வேண்டுமென்கிற "தியரி"-க்காக "நில உடைமைக்கு உச்சவரம்பு கட்ட வேண்டும், நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டவேண்டும்" என்று "ஸ்லோகன்" சொல்லுவது மாதிரி சொல்லிக் கொண்டிருந்தவர்கள் கூட இப்போது இது சம்பந்தமாக நிதானமாகப் பேசுகிறார்கள். எனவே உணவு உற்பத்தியை பாதிக்காத முறையில் நில உடைமைக்கு உச்ச வரம்பு. கட்டும் சட்டத்தைக் கொண்டுவர வேண்டும்.

சபையில் முதலில் சமர்ப்பிக்கப்பட்ட மசோதாவிற்கும் இப்போது சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் மசோதாவிற்கும் எத்தனையோ வேறுபாடுகள் இருக்கின்றன. முதலில் சமர்பிக்கப்பட்ட மசோதாவில் பொறுக்குக் கமிட்டி பல மாறுதல்களைச் செய்தது. அதற்குப் பிறகு அதில் இங்கேயும் பல மாறுதல்களைச் செய்திருக்கிறோம். மசோதாவில் முதலில் இருந்த பயம் இப்போது நீங்கிவிட்டது. மசோதாவில் "கம்பவுண்டிங்" முறையில் விதிவிலக்கு வரம்பை 1,500 ரூபாயாகத் தான் முதலில் நிர்ணயித்திருந்தோம். இப்போது அது 3,600 ரூபாயாக இருக்கிறது. இந்த மசோதாவில் இன்னொரு மாறுதலும் செய்யப்பட்டிருக்கிறது. அதாவது, அசல் மசோதாவில், விவசாய வருமானமல்லாத வருமானம் சேர்க்கப்பட்டு "ஹையர் ஸ்லாப்ஸ்" நிர்ணயிக்கப்பட்டிருந்தன; இப்போது விவசாய வருமானமல்லாத வருமானம் நீக்கப்பட்டிருக்கிறது. இது ஒரு பெரிய திருத்தமும் நல்ல திருத்தமும் ஆகும். இந்தத் திருத்ததை எல்லோரும் வரவேற்பார்கள் என்று நினைக்கிறேன். அதோடு, "கம்பவுண்டு" பண்ணுவது பற்றிய விதியும் மிகவும் தாராளத் தன்மையுடன் இருக்கிறது. அதாவது, விவசாயிகள் 50 ஸ்டாண்டர்ட்டு ஏக்கர்வரையிலும் "கம்பவுண்டு" செய்துகொள்ளலாம். அவ்வாறு "கம்பவுண்டு" செய்துகொண்டால் அது மூன்று வருஷத்திற்கு அமலில் இருக்கும் "கம்பவுண்டு" செய்துகொள்வதிலுள்ள நன்மைகளைப்பற்றி சங்கரன் கோயில் பிரதிநிதி எடுத்துசொன்னார்.

மேலும், கொடுக்க வேண்டிய வரிப் பணத்தை உரிய காலத்திற்குள் கொடுக்காவிட்டால், வரி செலுத்துபவர் அபராதம் கட்டவேண்டும் என்று கூறும் ஷரத்தை நீக்கிவிட்டோம். அதுவும் வரவேற்கத் தகுந்த திருத்தம். கனம் எதிர்க் கட்சித் தலைவர் இன்னொரு ஷரத்தையும் ஏன் நீக்க கூடாது என்று கேட்டார். ஒரு குற்றத்திற்காக க்ரிமினல் ப்ரோஸீஜர் கோடின் 177-வது பிரிவுப் பிரகாரம் தண்டனை விதிக்கப்படும் என்று இந்த மசோதாவில் கூறப்பட்டிருக்கிறது. அந்த தண்டனை சிறை தண்டனை அல்லது அபராதம். அதில் முக்கியமாக ஒரு விஷயத்தை கவனிக்க வேண்டும். அதாவது, வெறும் சிறை தண்டனை (ஸிம்பில் இம்பிரிஸன்மெண்ட்) அல்லது அபராதம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சில குற்றங்களுக்கு '**Simple imprisonment and fine**' என்று தண்டனை விதிக்கப்பட்டிருக்கும். ஆனால், இந்தக் குற்றத்திற்கு "**Simple imprisonment or fine**" என்று தான் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது. அந்தக் "கோட்"-ல் இப்பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள குற்றங்கள் தான் இந்த மசோதாவிலும் அத்தகைய தண்டனை விதிக்கத்தக்க குற்றங்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆகையால் அப்படிப்பட்ட குற்றங்களுக்கு இப்படி பட்ட தண்டனை சரியான தண்டனை என்று தான் நான் நினைக்கிறேன்.

"If any person makes a statement in a verification . . . which is false and which he either knows or believes to be false or does not believe to be true, he shall be deemed to have committed the offence described in section 177 of the Indian Penal Code."

20th September 1958] [Sri M. A. Manickavelu]

அதாவது, **Verification** உடன் உள்ள தப்புக்கணக்கானது தப்பான **Affidavit** போலத்தான் கருதப்படும். அவ்வளவு தண்டனையாவது இருந்தால்தான் மக்களுக்கு ஓரளவு பயம் இருக்கும். ஆனால், சட்டங்களில் சில குற்றங்களுக்கு சிறை தண்டனை கொடுக்கலாம் என்று சொல்லப்பட்டிருந்தாலும், நீதிபதிகள் குற்றவாளிகளுக்கு எப்போதும் சிறை தண்டனை கொடுப்பதில்லை ; அவர்கள் குற்றவாளிகளுக்கு சிறை தண்டனை கொடுப்பது மிக அபூர்வம். ஆகவே இந்த மசோதாவில் சிறை தண்டனை என்பது வெறும் பயமுறுத்தல் தான். அந்த ஷரத்து இருக்கவேண்டியது அவசியம். இந்த மசோதாவில் **Compounding** பண்ணிக்கொள்வதற்கு வகை செய்யப்பட்டாலும், ஒரு குறிப்பிட்ட அளவு நிலத்திற்கும் விவசாய வருமானத்திற்கும் வரியினின்றும் விலக்களிக்கப்பட்டிருப்பதாலும், இந்த மசோதாவின்படி விவசாய வருமான வரி செலுத்தக்கூடியவர்கள் மிகக் குறைவான எண்ணிக்கையிலேயே இருப்பார்கள். எனவே நாம் இயற்றும் சட்டம் மிகக் குறைவான விவசாயிகளையே பாதிக்கும் ; சில கனம் அங்கத்தினர்கள் சொல்வதுபோல் எல்லா விவசாயிகளையும் பாதிக்கும் என்று சொல்வதற்கில்லை.

இந்த மசோதாவிலுள்ள வரி விதிப்பு முறைகள் புதியனவாக இருக்கின்றன. எனவே அவைகளைச்சரியாகப் புரிந்துகொள்வதற்கு விவசாயிகள் கஷ்டப்படுவார்கள் என்பதாலும் அவைகளை விவசாயிகள் சரிவரப் புரிந்து கொள்வதற்கு கொஞ்ச நாட்கள் ஆகும் என்பதாலும், வரி வசூலிக்கும் போது நாங்கள் கெடுபிடி செய்யமாட்டோம். அதாவது வரி வசூலிக்கும் அதிகாரிகள் அவ்வளவு கடுமையாக நடந்துகொள்ளமாட்டார்கள். சட்டத்தை மக்கள் சரிவரப் புரிந்துகொள்ளும் வரையில் சட்டத்தை கடுமையாக அமல் நடத்தமாட்டோம். ஆகையால், சட்டத்தை சரிவரப் புரிந்து கொள்ளாத மக்களுக்கு வரி வசூலிக்கும் அதிகாரிகளால் தொந்தரவுகள் ஏற்படும் என்று கனம் அங்கத்தினர்கள் பயப்படவேண்டியதில்லை.

கடைசியாக இந்த மசோதாவிற்கு இவ்வளவு ஆதரவு கொடுத்த 12-20 p.m.
மன்ற பிரதிநிதிகள் எல்லோரும் எடுத்துச் சொன்ன விஷயங்களுக்காக நான் அவர்களை பாராட்டுகிறேன். சில திருத்தங்கள் கொடுத்தார்கள். அவைகள் பொருத்தமில்லாவை என்று நான சொல்லவில்லை. சில ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கலாம். ஆனால் இந்த மசோதா முதலில் எந்த நோக்கத்தோடு ஆரம்பிக்கப்பட்டதோ அந்த நோக்கத்தை மனதில் வைத்துக்கொண்டு பார்த்தால் எல்லாத் திருத்தங்களையும் ஒத்துக்கொள்வதிற்கில்லை. முடிந்த வரைக்கும் ஒத்து கொள்ளக் கூடியவைகளை ஒத்துக் கொண்டு இந்தச் சட்டத்தை நிறைவேற்றுகிறோம். எனக்குப் பின்னால் இருக்கும் கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள். இன்று நாள் நல்லது, சனிக்கிழமை, நல்ல காலம் அதனால் நமக்கு நிறைய பணம் வரும் என்று. ஆக, கடைசியாக நல்ல முறையில் இந்தச் சட்டத்தை இங்கு நிறைவேற்றி வைத்ததற்காக கனம் அங்கத்தினர்கள் எல்லோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டு எனது பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is :

"That the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 16 of 1958), as amended be passed."

The motion was put and carried and the Bill as amended was passed.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 9 a.m. on Monday, the 22nd September 1958.

The House then adjourned.